# தமிழ்த்தாய்

[சரித்திர நாடகம்]



"வடவை குரல்"

ஸ்ரீமகள் கம்பெனி
சென்னை : கோயமுத்தூர் : மதுரை

# என்னுரை

**த**மிழ்த்தாய் ஒருத்தியின் வீரக் காதையை அடித்தளமாக வைத்துப் புனையப்பெற்ற நாடகமே **தமிழ்த்தாய்**. எல்லாரும் அறிந்த ஒன்றாகக் கதை இருப்பினும் இந் நாடக ஆசிரியர் அதைப் புதுக் கோணத்திலிருந்து காட்டுவது மிகச் சுவையாக இருக்கிறது.

இந் நாடகத்தில் வரும் **நேரு தேசீய பள்ளி** கற்பனை யல்ல; உண்மையாக இருக்கும் ஒன்று. மத போதனையைக் கட்டாயமாகப் படிக்கும் 'தலைவிதி'யிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டது அப்பள்ளி. சுதந்திர சிந்தனை கொண்ட பெற்றோர்களின், பிள்ளைகளின் கருத்து, வெறுப்புக் கண்ணோட்டத்தோடு நோக்கப்பட்டு மத நீக்கம் செய்யப்பட்ட கொடுமைக்கு ஆளானவர்கள் பயிலும் பள்ளியே நேரு பாடசாலை.

புறநானூற்றில் தம் வீரத்தை யெல்லாம் பரப்பி நம்மைக் கொட்டாவிவிட வைத்த **தமிழ்த்தாய்**, தம் குழந்தைகள் வீணில் சிந்தும் கண்ணீரைத் துடைப்பாளோ, மாட்டாளோ?

இந் நூலாசிரியர் **'வடவை சூரல்'** முற்போக்கு கருத்துடைய இளைஞர். இளம் எழுத்தாளரும் சிறந்த நடிகரும் ஆவார்.

தமிழ் இலக்கிய நாடக நூல்களின் வரிசையில் இடம் பெறத் தக்கது இந்நூல் என்ற கருத்தில் தமிழகத்தின் முன் வைக்கின்றோம்.

**சென்னை**
6—6—56

**சங்கு கணேசன்**
(பதிப்பாசிரியர்)

# என் ஆசை

**ப**ண்டைத் தமிழ் இலக்கியங்களில் காணக் கிடக்கும் கருத்துக்களை நாடகமாக்க வேண்டுமென்பது மட்டுமல்ல எனது ஆசை, பள்ளி மாணவர்கள், நாடக மன்றங்கள் இத்தகைய நாடகங்களை நாடெங்கும் நடத்திக் காட்டித் தமிழ் இலக்கியங்களில் தேங்கிக் கிடக்கும் தேன் சுவைகளை மக்களுக்கு ஊட்ட வேண்டும் என்பதுதான் என் ஆசை!

இத்தகைய பணியில் ஈடுபட வேண்டு மென்பதற்காக புறநானூற்றுப் பாடல் ஒன்றை "தமிழ்த் தாய்" என்று மகுடம் சூட்டி நாடகப் பாணியில் சிறிது விரிவாக எழுதியுள்ளேன். நண்பர்கள் படித்தும்—நடித்தும்—ரசித்தும் பயனடைவார்களாக.

இந்நாடகத்தை எல்லோரும் எங்கும் என்றும் நடிக்க வேண்டு மென்ற நன்னோக்கத்துடன் அதற்குரிய பாடல்களையும் உரிய இடத்தில் சேர்த்துள்ளோம். உங்கள் ஆதரவே எனக்கு அளிக்கும் ஊக்கமாகும்.

இதனை எழுத எனக்கு ஊக்கமளித்து உதவிய தோழர் சந்தானம் அவர்கட்கும், இந் நாடகத்திற்கேற்ற பாடல்களை அமைத்துக் கொடுத்த கவிஞர் சுப்பு ஆறுமுகம், நாஞ்சில் இராசமணி ஆகியவர்கட்கும், புத்தக வடிவில் கொண்டு வந்து என் ஆசையைப் பூர்த்தி செய்த ஸ்ரீமகள் கம்பெனியாருக்கும் என் இதயம்கனிந்த நன்றி.

வடக்கன்குளம்
14—5—56

அன்பன்
"வடவை குரல்"

## மாணவர்கள் பாடுவது.

[பாரதியின் "விடுதலை...விடுதலை" என்ற மெட்டு]

வாழ்கவே! வாழ்கவே! வாழ்கவே!

(1) வாழ்க வாழ்க நேரு பள்ளி
நீடூழி வாழ்கவே!
வாழ்த்துப்பாடும் யாவருமே
வளர்பிறை போல் வாழ்கவே!
நாளுக்கு நாள் ஆயுள் பெருகி
நன்றாக வாழ்கவே!
நவயுகமாம் வானமதில்
விடிவெள்ளிபோல் வாழ்கவே!

(2) அன்பெனும் மதம்வளர்த்தே
அழகோடு வாழ்கவே!
அறிவுக்கெல்லாம் ஊற்றெனவே
போற்றும் வண்ணம் வாழ்கவே!
பண்பான பிள்ளைகளால்
பயன் அடைந்தே வாழ்கவே!
பைந்தமிழ்த்தாய் மேனி கொண்ட
பதக்கம்போல வாழ்கவே!
வாழ்கவே! வாழ்கவே! வாழ்கவே!

—சுப்பு ஆறுமுகம்

# பாத்திரங்கள்

- வீராங்கனை
- கணவன்
- மகன்
- தந்தை
- அண்ணன்
- சேரன்
- சோழன்
- அமைச்சர்
- புலவர்
- படைத் தலைவர்
- போர் வீரர்கள்
- கல்வி அதிகாரி
- தலைமை ஆசிரியர்
- தமிழாசிரியர்
- மாணவர்கள்

# தமிழ்த் தாய்

## நாடகம்

### கோரஸ்

[" ஜன கன மன "—என்ற மெட்டு.]

தமிழர் நாடும் தீந்தமிழ் மொழியும்
பாரினில் நிரந்தரம் வாழ்க!
தீமைகள் நீங்குக! நன்மைகள் ஓங்குக!
தியாகிகள் நீடுழி வாழ்க!
தேசமெலாம் புகழ் பேசிடும் வண்ணம்
தினம் ஒரு புதுமைகள் எழுக!
திசைதோறும் நம் புகழ் சூழ்க!
தீந்தமிழ் மொழியிது வாழ்க!
திராவிட நாடிது வாழ்க!

—[சுப்பு-ஆறுமுகம்]

### காட்சி

*பள்ளியில் பாடம் கற்பித்தல்*

*இடம்*:—நேரு தேசீய பள்ளி

*இருப்போர்*:—கல்வி அதிகாரி, தலைமை ஆசிரியர், தமிழாசிரியர், மாணவர்கள்.

*நிகழ்ச்சி*:—ஆருவது வகுப்பில் தமிழாசிரியர் தமிழ்ப் பாடம் கற்பித்துக் கொண்டிருக்கிறுர்.

**தமிழாசிரியர்:**—டேய்! சூசைமிக்கேல்! பாரதியாருடைய பாடல் ஒன்று சொல்லு!

**சூசை:**—"சாதிகள் இல்லையடி பாப்பா! குலதாழ்ச்சி, உயர்ச்சி சொல்லல் பாவம்"

**தமிழ்:**—உட்கார். சுப்ரமணியன்! திருவள்ளுவர் எந்தக் காலத்துப் புலவர்?

**சுப்ரமணியன்:**—கடைச் சங்க காலத்துப் புலவர்.

**தமிழ்:**—அவர்களுடைய பாடல்களில் ஒன்றைச் சொல்லு! மாணிட்டர்!

**மானிட்டர்:**— ............

**தமிழ்:**—(கோபத்தில்) சொல்லுடா சீக்கிரம்! 1330 குறள் களில் ஒரு குறள் தெரியாது?

**மானிட்டர்:**—(யோசித்து) "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக் காக்கினென் காவாக்கா லென்"

**தமிழ்:**—இதற்கு பொருள் கூறு பிரேமா!

**பிரேமா:**—தன் கோபம் பலிக்கு மிடத்தில் அது வராமல் தடுப்பவனே கோபம் காப்பானுவான்; அது பலிக் காத இடத்தில் அதனை தடுத்தென்ன? தடுக்காது விட்டாலென்ன?

**தமிழ்:**—இப்பொழுது இருக்கும் தமிழ்க் கவி யார்? தெரிந்தவன் கையைத் தூக்கு (மூவர் கை தூக்க) கீதா! நீ சொல்லு!

**கீதா:**—புரட்சிக்கவி பாரதி தாசன் சார்!

**தமிழ்:**—அவருடைய பாடல்களில் இரண்டு வரிகளை மட் டும் சொல்லு கலைச்செல்வன்!

**கலைச்செல்வன்:**—"காதலிலே கவிதையிலே களம் போகும் பேச்சு! கணவனுக்கும், மனைவிக்கும் திராவிடமே மூச்சு!"

(தலைமை ஆசிரியரும், கல்வி அதிகாரியும் உள்ளே நுழைகிறார்கள். மாணவர்கள் எழுந்து நின்று வணக்கம் செலுத்துகிறார்கள்)

**[" வஞ்சி பூமி " என்ற மெட்டு.]**

(1) போங்கும் கீர்த்தி நாளும் சேர்ந்து
எங்கள் **நேரு பள்ளி** வாழ்க—போங்கும்

(2) ஒன்றே தெய்வம் ஒன்றே அன்பாம்
ஒன்றே மக்கள் என்றே கோள்வோம்—போங்கும்

(3) வெள்ளை உள்ளம் அன்பின் குறியாம்
**நேரு பள்ளி** நேர்மைக் கூடம்—போங்கும்

(4) கேடு இல்லா செல்வம் கல்வி
நாடிப் பெற்றே நன்மை பெறுவோம்—போங்கும்

(5) **நேரு பள்ளி** கண்டோர் என்றும்
பேரும் பேறும் பெற்றே வாழ்க—போங்கும்

—**[நாஞ்சில் இராசமணி]**

**கல்விஅதிகாரி:**—இப்போது என்ன பாடம் நடக்கிறது?

**தமிழ்:**—தமிழ்!

**க. அதிகாரி:**—அப்படியா? சந்தோஷம்! நான் ஒரு கேள்வி கேட்கிறேன் மாணவர்கள் பதில் சொல்லட்டும். எல்லோரும் கவனியுங்கள். தமிழ் என்றால் என்ன? நீ......நீ.......யாருக்குத் தெரியும்?

**தமிழ்ச்செல்வன்:**—தமிழ் என்றால் "இன்பம்" என்று பொருள்.

**க. அதிகாரி:**—சபாஷ் சரியான விடை உன் பெயர் என்ன?

**த. செல்வன்:**—என் பெயர் தமிழ்ச் செல்வன்.

**க. அதிகாரி**—ஓ! அப்படியா? (அடுத்தவனை) உன் பெயர்?

**சிவநாதன்:**—சிவநாதன்.

**க. அதிகாரி:**—(மற்றவனை) உன் பெயர்?

**குருஸ்:**—குருசந்தோணி.

**க. அதிகாரி:**—அடுத்தவன்?

**சொள்ள மாடன்:**—சொள்ள மாடன்.

**க. அதிகாரி:**—(ஆச்சரியத்துடன்) எட்மாஸ்டர் சார்! உங்கள் பள்ளிக் கூடத்தில்.........

**தலைமை ஆசிரியர்:**—எல்லா சாதியாரும், எல்லா மதத்தினரும் படிக்கிறார்கள்.

**க. அதிகாரி:**—அதுதானே பார்த்தேன்! கிறிஸ்தவன்—அடுத்தது இந்து—அதற்கடுத்தது இந்த இரண்டுமே இல்லாத பெயர்! தாழ்த்தப் பட்டோர் யாராவது?—

**தலைமை ஆசிரியர்:**—தாழ்த்த பட்டோர்க்குக் கென்று தனியிடம் ஒதுக்க வில்லை.

**க. அதிகாரி:**—அப்படியென்றால் சாதி மத பேதமற்ற பள்ளி என்று சொல்லுங்கள்.

**தலைமை ஆசிரியர்:**—அதோடு சாதி, மத சார்பற்ற பள்ளியுங் கூட ஸார்!

**க. அதிகாரி:**—ரெம்ப சந்தோஷம் சார்! (தமிழாசிரியரைப் பார்த்து) சரி ஒரு பாடம் நடத்துங்கள் சார்!

**தமிழ்:**—மாணவர்களே! எல்லோரும் நூருவது பக்கத்தை புரட்டி "தமிழ்த்தாய்" என்ற பாடத்தைப் பாருங்கள் இந்த பாடத்தில் வருகின்ற பாடல்கள் புறநானூற்றில் உள்ள பாடல்களில் காணப்படுகின்றன. புறநானூறு என்பது பழங்காலத்துத் தமிழர்களின் வீர இலக்கியத்தின் தொகுப்பு. நம் மூன்னோர் "போர்" என்றதும் எப்படி பொங்கி எழுந்தார்கள்; முன் வைத்த காலைப் பின்வைக்கவில்லை; புறமுதுகுக் காட்டவில்லை யென்ற செய்திகளை நமக்கு தரும் உண்மை சம்பவங்கள் நிகழ்ந்த பாடல்களை "தமிழ்த் தாய்" என்ற தலைப்பில் உங்களுக்கு ஆசிரியர் தந்திருக்கிருர். இதிலே தமிழச்சி ஒருத்தியின் வீரம் தொனிக்கிறது. அது எப்படி என்பதை இப்பாடலில் காணலாம். டேய்! ஜெயபால்! பாடலை வாசி!

**ஜெயபால்**—(வாசிக்கிருன்.)

"கெடுக சிந்தை கடிதிவள் துணிவே
  மூதின் மகளிர் ஆதல் தகுமே
மேனுள் உற்ற செருவிற்கிவள் தன்னை
  யானை எறிந்து களத்து ஒழிந்தனனே
நெருநல் உற்ற செருவிற்கிவள் கொழுநன்
  பெருநிரை விலங்கி யாண்டுப் பட்டனனே
இன்னும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
  வேல்கைக் கொடுத்து வெளிது விரித்துடீஇப்
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி
  ஒரு மகனல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்கென விடுமே"

**தமிழ்:**—பாடலுக்குப் பொருள் கூறுகிறேன். எல்லோரும் கவனமாய்க் கேளுங்கள்!

[திரை—திருப்புக் காட்சி]

## களம்: 1

### சேர நாட்டுப் போர் முழக்கம்

**இடம்:**—சோழ நாட்டு எல்கை.

**இருப்போர்:**—சோழ நாட்டு பறையறைவோர், சோழ மக்கள்.

**நிகழ்ச்சி:**—சோழ நாட்டு மக்கள் அறுவடை செய்து தலையில் நெற்கதிர்க் கட்டுகளைச் சுமந்து வருகிறார்கள். சோழ நாட்டு எல்கையில் நின்று சேர நாட்டு பறையர் பறை முழக்க அனைவரும் அருகில் செல்லுகிறார்கள்.

**அறிவிப்பு:**—சோழ நாடே! கேள்! எமதரசர் சேர மன்னர் உன் மேல் படையெடுக்கத் தயாராகி விட்டார். உன் கோட்டை, கொத்தளங்களில் தமது கொடி பறக்க வேண்டும் என்பதே எமது மன்னரின் ஆசை. ஆதலால், எட்டு நாள் தவணைக்குள் ஒன்றில் சோழன் தோல்வியை ஒப்புக் கொள்ள வேண்டும். இல்லையேல், போருக்குத் தயாராக வேண்டும் போருக்குத் தயாரென்றால், சோழ நாட்டுக் குழந்தைகள், பெண்டீர், வயோதிகர், பிணியாளர், பசுக்கள், ஈறாக அனைவரும் ஒதுங்கிச் சென்று தப்பிப் பிழைக்க நெறி தவறா எமது சேர மன்னர் அரசியல் அறநெறியுடன் ஆணையிடுகிறார். டும்! டும்!! டும்!!! .

**1-வது ஆள்:**—தப்பிப் பிழைக்கணுமாம்! தப்பி!

**2-வது ஆள்:**—ஒரு வேளை இப்படி ஓடிப்பிழைத்தவர்களெல்லாம் தான் சேர நாட்டிலே இருக்கிறார்களோ! கீ......கீ......

**3-வது ஆள்:**—ச்சூ! (மெதுவாக) இருக்காது அண்ணே! அந்த ராசா அப்படியே ஒரு அம்புட்டு அம்புட்டிப் பார்க்கிறாரு. நாட்டை போட்டுற்று ஓடற மாட்

டான்னுன்னு அகதிகள் சொத்தை அபகரித்துப் பழக்க மிருக்கும்.

**2-வது ஆள்:**—சேர ராச என்ன நம்ம ராசாவை சின்னப் பிள்ளனு நினைச்சுக் கிட்டாரு?

**4-வது ஆள்:**—இல்லண்ணே! சாம, பேத, தான, தண்ட முன்னு நாலு வழியுண்டு எதிரிய அடக்க. இப்போ கொஞ்சம் தண்டத்தத் தூக்கி வெளியே விடுறாரு. அவ்வளவுதான. இதிலே வெற்றியில்ல பிறகு "பகை யாளியை உறவாடிக் கெடு"ங்கிற கட்டத் துக்கு வருவாரு. (எல்லாரும் விழிக்க) என்ன தம்பி முழிக்கிற அதான் பதவியைக் கொடுத்துப் பல்லப் பிடுங்கிற சமாசாரம்.

**5-வது ஆள்:**—ஓ! அதுவா! இந்தக் கடிக்கிற நாய்க்குஎலும் புப் போட்ர சங்கதின்னு சொல்லு!

**4-வது ஆள்:**—ஆமாம்! அதான்! அது 'லபக்'கின்னு கவ் விக் கிட்டு நமக்கென்னுன்னு போயிரும் அப்புறம் என்ன?

**3-வது ஆள்:**—அட இரப்பா! வண்டியை விட்டுக் கிட்டே போறியே! அதுக்கு நம்மா ராசா ஒண்ணும் இளிச்ச ராசாயில்ல தம்பி! தெரியுமா?

**பெரியவர்:**—தம்பி! சேரனே நல்லவன் தான்.' அறிவாளி-நீதிமான் தான்.

**3-வது ஆள்:**—சோழன் மட்டும் கெட்டவனே?

**4-வது ஆள்:**—அடா! அடா! இரப்பா நாய்க்கு முந்தட்டா நரிக்கு மூந் தட்டான்னு. நீ சொல்லு தாத்தா?

**பெரிய ஆள்:**—யாரப்பா அப்படி சொன்னது? சோழனும் அப்படித்தான் எப்படியோ சண்டை மூண்டு விட் டது.

**3-வது ஆள்:**—அண்ணே! கேட்டியா? பெரியவரு அப்படியே பூச்சு மானம் பூசுருரு. முழுக்குப் போடுருரு அண்ணே! முழுக்கு! பழைய போருல இடைச் செங்கலைப் பிடுங்கிக் கிட்டு நின்னது இவருதான். இப்போ மறைக்கிராரு. இவரை நம்பினு நாசம் தான், நொடிக்கு நொடி மாறுவாரு—இவரு பேச்சக் கேட்காதுங்க அண்ணே.

**1-வது ஆள்:**—நீ சொல்லறது சரிதான் அண்ணே! கிழடு கட்டைங்க கிடக்கிற இடத்திலே தான் கிடக்கணும்.

**3-வது ஆள்:**—உடனே சேரனின் செய்தியை நம்ம ராசாவுக்குச் சொல்லி விரோதிக்கு சரியானபடி புத்தி புகட்டனும். வாருங்கோ போவோம்.

[அந்தக் கூட்டத்தில் நின்ற ஒற்றன் திடீரென்று மறைகிருன். அதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப் படுகிருர்கள்]

**1-வது ஆள்:**—அது யாரு அண்ணே! சொல்லாம கொள்ளாம போருரு.

**2-வது ஆள்:**—எங்கே போயிருவாரு? சுத்தி சுத்தி சோழ நாட்டுக்குள்ள தானே திரிவாரு. பார்த்துக்கலாம் புறப்படுங்கோ!

[திரை]

## களம்: 2

### சோழன் கொலுவிருத்தல்.

**இடம்:**—சோழன் கொலு மண்டபம்.

**இருப்போர்:**—அரசன், அமைச்சர், குரு, புலவர் முதலியோர்.

**நிகழ்ச்சி:**—புலிக் கொடி பறக்கும் அரியாசனம் சோழனின் வருகைக்காக காத்திருக்கிறது. அமைச்சர் பிரதானிகள் ஆசனத்தில் அமர்ந்தவாறிருக்க, சோழ மன்னன் ஆடம்பரத்துடன் கொலு மண்டபத்திற்குள் வருகிறான்.

**சேவகன்:**—*ராஜாதி ராஜ! ராஜ தீர! ராஜ பராக்கிரம! ராஜ கம்பீர! ராஜ கோலாகல! ராஜ மார்த்தாண்ட! சோழ மண்டல மன்னாதி மன்னர்! பராக்! பராக்!!*

[*மன்னர் ஆசனத்தில் அமர பூமாரி பொழிகிறது*]

**அமைச்சர்:**—சோழ வள நாட்டு மன்ன! பொது நலமே தன்னலமாகக் கொண்டு தரணியாளும் தயாபரா! ஆறறிவு மக்கள் முதல் ஈ, எறும்பு ஈருகத் தங்கள் புகழ்பாடி மண்ணில் உண்டு மகிழ்ந்து வாழ்கிறார்கள் என்பதில் ஐய முண்டோ! அறிவு, ஆற்றல், அன்பு அருள் அனைத்திலும் அனைவருக்கும் முதல்வன் சோழன் என்று தமிழ் கூறும் நல்லுலகம் தன் நாவால் சொல்லிச் சொல்லிப் புகழ்வதை நான் மீண்டும் ஈண்டு கூற ஒருப்படவில்லை. தங்கள் ஆட்சியில் மெலியவர், வலியவர், சிறியவர், பெரியவர், வறியவர், திருவினர் என்ற பேதம் நீக்கி பெருமைப்பட வாழ்கிறார்கள் நம்மவர் என்பதை இத் தருணத்தில் தங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். புலிக் கொடி பறக்க வெண்பொற் குடையின் கீழ் என்றென்றும் ஒரே குடும்பமாய் இருந்து தங்களின் ஆணைக்கு அடிபணிந்து—சோழ வள நாட்டிற்குப் புகழைத் தேடித் தருவதே

என்றென்றும் எங்கள் கடமை யென்பதை இந் நன்னுளிலே இந்த மக்கள் சார்பில் தெரிவிக் கிறேன். வாழ்க!

[அமருகிருர்]

அரச குரு:—சோழ வள நாடு சோறுடைத்து மன்னு! சோழ நாட்டில் ஒருவன், சோற்றிற் கின்றி, சோம்பி இறந்தான் என்ற செய்தி கேட்டதில்லை யான். மன்னன் வாழ்வது மக்கள் வாழ என்பது இந்த நாட்டில் தான் போலும். பசியின்றி, பிணி யின்றி எந்தக் குறையுமின்றி வாழும் மக்களின் மனதை மகேசன்பால் சற்று திருப்பிவிட எண்ணி யுள்ளேன். மன்னனே மகேசன் என்று—போரே உரிமை யென்று கிடந்த உன் மக்களுக்கு வைகுண்டத்தில் நல்வாழ்வு நீடு வாழ வழி செய்ய வேண்டாமா? மருள், நீங்கி அருள் பெற்று வாழ ஆவன செய்ய வேண்டாமா அரசே! ஆகவே கடந்த போரிலே இடிந்த கோயில்களை நீ எழுப்பித் தந்தால் மறுலோகத்தில் மக்கள் வாழ்வு விடிந்ததா கும். இதுவே என் விண்ணப்பம்! வேண்டுகோள் வாழ்க நீ! நீடுழி வாழ்க!

புலவர்:—மன்னர் பெரும! பெருந்திருவும்! பெருந்தகவும்! அருந்திறலும் நிறைந்து உறைந்தவா! நின் கொற் றம் வாழ்க! நனிது வாழ்க! நெடிது வாழ்க! கொடி, குடை, படை நெடிது செல்ல கரியும் பரியும் அயல் வர—தமர் முதலெவரும் தாழ்ந்து தலை வணங்க—தோழியரும், ஊழியரும் தொழுது பணி செய்ய, அரியணை ஏறிய மன்னர் பெருமை! நின் உள்ளப் பெருமையையும், வள்ளற் றன்மையையும்

கேட்டுக் கேட்டு யான் எல்லையில்லா இன்பம் கொள்ளை கொண்டேன். வாடட்மிக்கூர்ந்து வருந்தி அயர்ந்து வந்து சேர்ந்தார்க்கும் தகுதி யில்லாருக் கும் மிலதியாக ,வல்லவா! நீ எல்லையில்லா வரிசை செய்து விறலுடன் விருப்பாயாம் கேட்டுக் கேட்டு உளம் பூரித்தேன். அடவியிலே வாவி, வாவியிலே ஆம்பல்! நெளியும் சிற்ருறிடையே துள்ளும் கெண்டை! மேகத்தை முட்டும் மரம்! ககனத்தை மறைக்கும் திரையென கிளைகள். அத்தனையும் உன் நாட்டின் உயர்வை உரைப்பதன்ருே! வந் தவர் கருத்தை வாய்திறந் துரைக்காமலே முந்துற அறியும் மூதறிவாளனே! ஓரறிவுயிர்க்கும் ஊறு நேரா வண்ணம் பேரறிவோடு பொருந்திருக்கும் புரவலன்! என் மன்னனென்று உரைக்கக் கேட்டு உளம் புளகாங்கிதம் அடைந்தேன். அழகு — அன்பு — அறிவு — அஞ்சாமை — ஆள் வினை—ஆற்றல்—தோற்றம் அனைத்தும் சேர்ந்து ஏற்றம் கொண்டவனே! என் கொற்றவன், என் றறிய என்றுமிலா இன்பம் இன்று கொள்கிறேன் நீ வாழ நாடு வாழும்! நாடு வாழ நாங்கள் வாழ் வோம்! வாழ்க நின் கொற்றம்.

**அரசன்:—** நன்றி மறவா மக்களே! கடமையுள்ளம் கொண்ட குடிகளே! உங்கள் அன்பும் ஆதரவும் ராஜபக்தியும் கண்டு மகிழ்ந்தோம். போர்! போர்! என்று எத்தனையோ முறை பகைவனேடு போர் தொடுத்தோம். நம் நாட்டை நமதாக்க, பட்ட அல் லல்கள் அநேகம். தொடுத்த போர்கள் போதும்.

இனி பகை விடுத்து வாழ்வோம். போர் தொடுத்து வாழோம். திரிசீலத்தைப் பின்பற்றுவோம். உங்கள் கடமையுள்ளத்தைக் கண்டு களிப்படைகிறோம். வாழ்க சோழ நாடு!

[நடனம் ஆரம்பமாகிறது.]

(டான்ஸ் பாடல்)

[மணமகளில் "சின்னஞ் சிறு கிளியே"—என்ற மெட்டு.]

(1) சோழ வள நாடு—தூய
சுதந்திர நாடு!
ஆளும் இனத்துக் கெல்லாம்—நல்ல
அறிவு தரும் நாடு!

(2) பட்டினிப் பேச்சுமில்லை—துணிப்
பஞ்சம் எதுவுமில்லை!
கட்டின பெண்ணைவிட்டு—வேறொன்றைக்
காதல் கொள்வாருமில்லை!

(3) கோவில் நிறைய உண்டு—ஆனால்
கொள்ளையடிப்பாரில்லை!
காவல் நிறைய உண்டு—ஆனால்
கள்ளர்கள் யாருமில்லை!

(4) சாதம் பொங்கிடவும்—இங்கே
சந்தனக் கட்டைகளாம்!
ஊதிடும் குழலும்—செய்வது
உயர்ந்த தங்கத்திலாம்!

(5) கலைமிகும் நாடு—ஒருமைக்
காதல் வளர்நாடு !
நிலை யுள்ள நாடு—உலகில்
நிகரற்ற நாடு !

(6) வாழும் வகைபுரியும்—எங்கள்
சோழன் புகழ் வாழ்க!
நாளும் மகிழ்வுதரும்—எங்கள்
நற்றமிழ்த்தாய் வாழ்க !

-[சுப்பு-ஆறுமுகம்]

[முடியும் தறுவாயில் வாயில் காப்போன் ஓடி வருகிறான்]

**காவலன்:**—அரசே! ஒற்றனொருவன் உள்ளே வர துடிக்கிறான். அவசர சேதியாம்!

**அரசன்:**—அப்படியா வரவிடு.

[அவையில் சலசலப்பு ஏற்படுகிறது. ஒற்றன் அரசனை வணங்கி நிற்க]

அப்படியென்ன அவசர சேதி ஒற்றரே!

**ஒற்றன்:**—அரசே! அண்டை நாட்டு அரசன் அவசரப்பட்டு விட்டான்.

**அரசன்:**—என்ன சொல்கிறீர்? பாண்டியனா?

**ஒற்றன்:**—இல்லை. சேரன்! நம் புலிக் கொடியை இறக்கி விட்டு விற்கொடியை ஏற்றப் போகிறானாம்.

**அரசன்:**—இந்தச் சோழனை எதிர்த்து அந்தச் சேரன் போர் தொடுக்கப் போகிறான் ! அப்படித்தானே ஹா!......ஹா!!.........

**ஒற்றன்:**—ஆம்; அரசே! எல்லைப்புறத்தில் போர்ப்பறை அறைந்தான். இழித்தும், பழித்தும் பேசிவிட்

டான். நம் பெருமையை அழிப்பானும். நாம் அருமையாய்ப் போற்றி வரும் உரிமையைப் பறிப் பானும் வேந்தே! அந்தப் பகைவன்!

**அரசன்:**—ஆ! என்ன சொன்னான்? (பற்களை 'நறநற' வென கடித்தவாறு) உரிமையைப் பறிப்பானு! சோழ நாட்டான் உரிமையைச் சேர நாட்டான் பறிப்பா...ன். ஹா...ஹா......ஒற்றனே! வேறு என்ன நடந்தது! விபரமாய்ச் சொல்!

**ஒற்றன்:**—சேரனுக்குத் தலைவணங்கி சோழன் கப்பங் கட்ட வேண்டுமாம்.

**அரசன்:**—தவறினால்!

**ஒற்றன்:**—தலை தப்பாது; எட்டு நாள் தவணை! பெண்டிரை யும், பிணியாளரையும் பிழைத்துப்போக எச்ச ரிக்கை வேறு விடுத்துவிட்டான்.

**அரசன்:**—தலை தப்பாது. எட்டு நாள் அமைச்சரே! கேட்டீரா ஒற்றர் கூற்றை! மலையைக் கில்ல எலி புறப்பட்டிருக்கிறது ஹா!.........ஹா!!......சேரன் சிறுவன் என்று பார்த்தால் அவன் செருமுனைக்கு வேறு அழைக்கிறான். அமைச்சரே! போர் வேண்டுகிறான் மீண்டும் அந்த போக்கிரி!

**புலவர்:**—(குறுக்கிட்டு) மன்னர் பெரும! போர் மூண்டால் துயர் நீளும் உயிர் மீளுமா?

**அரசன்:**—புலவரே! என்ன சொல்கிறீர்? எதிரியின் காலடி என் நாட்டில் படுவதா? என்னாட்டில் அவன் நிழல் படுவதைக்கூட ஆட்சேபிக்கிறேன். உயிரைக் கொடுத்தேனும் உரிமையைக் காப் பேன்.

**புலவர்:**—போர் என்றால் நம் கொள்கை என்னாவது? போர் செய்வதில்லை என்று இப்போதுதானே பிரகடனம் செய்தீர்கள்.

**அரசன்:**—போர் செய்வதில்லை யென்றால் புறங்காட்டி ஓடுவதா! நன்று! நன்று! அடிக்க வருபவனுக்கு ஆலிங்கனமா? கடிக்க வரும் பாம்பிற்குக் கன்னத்தில் முத்தமா!

**புலவர்:**—அப்படியென்றால் தாங்கள் கூறிய திரிசீலம் என்னுவது?

**அரசன்:**—தேவைப்பட்டால் நாமே அதை ரத்துச்செய் வோம். திரிசீலமோ பஞ்சசீலமோ ஒரு நாட்டின் சீரமைப்பிற்கு ஊறு செய்தால் அது தேவையா? நாமே ஆக்கினோம். நாமே அழிப்போம் நாட்டின் நன்மைக்காக.

**புலவர்:**—அவசரம் வேண்டாம் அரசே! எல்லையில்தானே இருக்கிறான். எதிரி!

**அரசன்:**—இப்பொழுது ஏனென்று கேட்காவிட்டால் தனக்கென்று எல்லை போடுவான். பிறகு உள்ளே வருவான். உனக்கேது நாடு என்பான்? அப் போதும் கொள்கை குறுக்கிடும்.

**புலவர்:**— அரசே! நம் கொள்கை என்னுவது?

**அரசன்:**—நம் கொள்கை கொள்ளையனை நம் கோட்டைக் குள் கூப்பிடு மென்றால் அந்தக் கொள்கையை கொலை செய்வதா அல்லது கோட்டையையே உடைப்பதா? புலவரே! புத்திக்கெட்டாலும் புலவ ருக்குக் கெட்டதுபோல் யாருக்கும் கெடக்கூடாது அமைச்சரே! என்ன யோசிக்கிறீர். எல்லைப் பாது காப்பு யாரைச் சார்ந்தது?

**அமைச்சர்:**— யானைப் படைத்தலைவன் வீரவளவனைச் சார்ந்தது.

**அரசன்:**—எச்சரிக்கை! என் முத்திரை இல்லாத எவனை யும் உள்ளே விடவேண்டாம். எதிர்த்துப் பேசு

பவன் எவனுக யிருந்தாலும் வெட்டி வீழ்த்தச் சொல்லும். (புலவரைப் பார்த்து) புலவரே! வானம் பெறினும், இன்றி வையம் வரினும் மானம் அழிந்து வாழ மாட்டான் இந்தச் சோழ நாட்டான். பின்னவன் போரில் முன் பாய்ந்தான் என்று தானிருக்கும் — முன்னவன் பின் பாய்ந்தான் என்ற இழி வராது. அருமை யிழந்து, பெருமை குலைந்து சிறுமை யடைவதைவிட இறப்பைச் சிறப்பாகக் கொள்வோம். எட்டு நாளையில் புலிக்கொடி இறங்குவதையும் அவன் விற்கொடி ஏறுவதையும் பார்க்கத்தான் போகிறேன். சோழன் தலை வணங்குவதா அல்லது சேரன் தலை உருளுகிறதா வென்பதை உலகிற்குக் காட்டுகிறேன். மங்கையரையும், மகவையும் ஓடிப் பிழைக்க வழி தேடச் சொன்னுனும் பேடிப்பயல்! அந்தச் சேர நாட்டு பழக்கம் என் சோழ நாட்டிற்கில்லை யென்பதைப் போர்க் களத்தில் புரிந்து கொள்வான். வீட்டிற்கு ஒரு வீரன் நாட்டை காக்கப் புறப்படு! தயாராகட்டும் தளவாடங்கள்! ரத கஜ துரக பதாதிகள் அத்தனையும் செல்லட்டும் களம் நோக்கி. எதிரியின் படை, நம் திசை நோக்குமுன் எத்திசையும் பாயட்டும் நம் படை. நாடு நகர் தகர்ந்து தவிடு பொடியாக்கித் தரைமட்டமாக்கட்டும். மண்ணோடு மண்ணுய் உருத்தெரியாமல் புழுதியடைந்து போகட்டும். ஆழம் தெரியாது காலையிட்டிருக்கும் அந்த அறிவிலியின் தலைத் தப்பாது இம்முறை. பறை முழங்கட்டும்! படை கிளம்பட்டும்! பகைப்புலம் நோக்கிப் பரவட்டும்! பார்க்கட்டும் பகைமரசன் படைக்கலங்களை! பயந்தோடினுல் பிழைத்தான், இல்லையேல்,

*அவன் பிணத்தைக் கூட பார்க்காது அவன் நாடு! முழங்கட்டும் சங்கு! ஹா!......ஹா!! ......முழங்கட்டும் சங்கு! ஹா!......*

1

இனிய தமிழ் ஓசையினாலே—நம்
நனி மிரட்டும் பகைமுடிப்போம்
நனி மிரட்டும் பகை முடிப்போம்.

2

முன்னாளில் கடல் மூழ்கி
முத் தெடுத் தோமே
இன்னாளில் வந்த இவன்
எண் ணிப் பார்த்தானே

3

வீரம் தோன்றித் துள்ளி ஆடும்
செந் தமிழ் நாடே
ஈரமற்ற பகைவன் இதை
எண் ணிப் பார்த்தானே.

**வேறு**

செல்லுவோம் செல்லுவோம்
செந்தமிழ் நாட்டாரே
வெல்லுவோம் வெல்லுவோம்
வந்திடும் தொல்லையை.

—[நாஞ்சில் இராசமணி]

*[சங்கு முழங்குகிறது அரசன் விரைந்து செல்கிறான்]*

[திரை]

## களம்: 3

### தளபதி வீரம் ஊட்டல்

இடம்:—பாசறை.

இருப்போர்:—தளபதி, சேனை.

நிகழ்ச்சி: சோழ நாட்டுப் படைகள் வேல், வில், வாள், ஈட்டி, கேடயம் முதலியவற்றுடன் அணி வகுத்து நிற்க தளபதி வீரம் ஊட்டு கிறார்.

தளபதி:—சோழ வள நாடு பெற்றெடுத்தச் சிங்கங்களே! தாய் நாட்டின் காவலர்களே! தயாராகுங்கள்! பிறந்த பொன்னாட்டைக் காக்க! சேர நாட்டான் செரு முனைக்கழைக்கிறான்! சோழனுக்குச் சவால் விடுகிறான் சேரன்! கொல்லைப்புறக்குக்கல் போல் குரைக்கிறான் அந்த குதர்க்கன்! சோழ மாதாவின் மானத்தை மாசு படுத்த மனப்பால் குடிக்கிறான் மாற்றான்! வீரூப்பு பேசும் வீரனுக்கு நாம் நேருக்கு நேர் பேசும் தினம் வந்துவிட்டது. களம் பல கண்ட காளைகளே! உளமதில் உறையும் கருணைதனை கரைத்து விடுங்கள்! கல்லாக்கி விடுங் கள் உங்கள் நெஞ்சகத்தை! வெட்டுங்கள், வேல் கொண்டு குத்துங்கள். உடல் சரிய தலைகள் தரை யில் உருளட்டும். குருதி தாரை தாரையாய் வீதியில் ஓடட்டும். கொட்டம் அடங்கட்டும். மட்டம் தட்டி மண் ணோடு மண்ணாக்குவோம்.

நேர்மை தவறு நமதரசரை முறை தவறி பேசினானும் அந்தப் பேடி! போர் முறை தெரியா தவர்களா நாம்? போர் என்றதும் புறங்காட்டுப வரா? அல்லது எதிரியைக் கண்டு பதறுபவனா? அச்சம் நம் அகராதியில் இருந்ததுண்டா? பாய்ந்து வரும் வேலைக் கண்டு நயந்த துண்டா? பிணத்தைக்

கண்டு பேதலிப்பவர்களா? குருதியைக் கண்டு சூலத்தைத் தடுத்து வேழத்தில் பாய்க்க அது வீறு கொள்ளும் போது விழி தட்டாமல் நிற்பவர்களல்லவா! சித்தம் குலைபவர்களா? வாழையடி வாழையாகச் சோழனுக்கு வணங்கி வந்த தலைகள் சேரனுக்கு வளைவதா? நாட்டை ஆளும் நாம் இனி நாட்டை இழந்து நாடோடியாவதா? புலிக்கொடி இறங்கி விற் கொடி ஏறுவதைப் பார்த்திருப்பதா? அல்லது பொறுத்திருப்பதா?

புலி நிகர் புரட்சிக் காளைகளே! கொட்ட மடக்கி—மட்டந் தட்டிட திட்டம் தீட்டி விட்டோம். களம் அதோ! கட்டாரி இதோ! வேலும் வாளும் எள்ளளவும் பழுதில்லை. தின வெடுக்கும் தோள்களுக்குத் தருணம் இதோ! அகந்தை கொண்டவனை அங்கம் அங்கமாய் பிளந்து அணு அணுவாக பிய்த்தெறிய வாய்ப்பிதோ! பகைவனின் சிரங்களை வெட்டி பருந்துகளுக்கு வீசுங்கள். அநீதியை அழிக்க, அதர்மத்தை ஒழிக்கப் புறப்படுங்கள்!



**படைவீரர்கள்:**—தயார்! தயார்! !

**தளபதி:**—அதுவே நம் தாரக யந்திரமாக யிருக்கட்டும். கேவலம் புலியோடு விளையாட எலி புறப்பட்டு விட்டது. சிறுத்தையின் சிரத்தில் ஏற சிறு நாய் துணிந்து விட்டது. காவேரிக்கரையில் களம் அமைத்துள்ளானும்! இனியும் பொறுத்தால் சிங்கத்தைக் குகையில் சந்திக்க சிறு நரி வரும்! படைக் கலங்களை கையிலெடுத்துப் பாயுங்கள்! வாழப் பிறந்த சோழ மக்களே! உயரட்டும் புலிக்கொடி! கிளம்பட்டும் முரசொலி! பறக்கட்டும் தீப் பொறி! ஹா!......ஹா!!

**எல்லோரும்:**—வெற்றி! நமதே! வெற்றி!!—நமதே!!

["அச்சமில்லை......அச்சமில்லை" என்ற மெட்டு.]

(1) வெற்றிநமது வெற்றிநமது
வெற்றிநமது வெற்றியே!
வெற்றி மாலை சூடி வருவோம்
விண்ணுலகும் சுற்றியே!
பெற்றிடுவோம் வீரத்தழும்பை
வெற்றுடலைச் சுற்றியே!
வெற்றிநமது வெற்றிநமது
வெற்றிநமது வெற்றியே!

(2) மார்பினிலே காயம் தாங்கி
தோற்றாலும் வெற்றியே!
முதுகினிலே காயம் தாங்கி
ஜெயிச்சாலும் தோல்வியே!
வீரனுக்கு எந்த நாளும்
எதனிலுமே வெற்றியே!
வெற்றிநமது வெற்றிநமது
வெற்றிநமது வெற்றியே!

-[சுப்பு-ஆறுமுகம்]

[திரை]

## களம்: 4

### போர்ப்பறை முழக்கம்

இடம்:—வீதி.

இருப்போர்:—சோழ நாட்டு பறையர், பொது மக்கள்.

நிகழ்ச்சி:—வீதியில் போர்ப்பறை முழக்கம் கேட்டு மக்கள் கூட்டம் திரண்டு விடுகிறது.

அறிவிப்பு:—டும்! டும்!! டும்!!! சோழ நாட்டு மக்களே! சேர நாட்டான் போருக்கழைக்கிறான்! அவன் செருக் கடக்கி முறியடிக்க வீட்டிற்கொரு ஆண் மகன் தேவை! இது நமது மன்னர் ஆணை! டும்! டும்!! டும்!!!

[மக்கள் கூட்டம் உணர்ச்சியோடு கலைந்து செல்லுகிறது]

[திரை]

## களம்: 5

### தந்தை போர்க்களம் புறப்பாடு

இடம்:—**வீடு.**

இருப்போர்: **வீராங்கனை, தந்தை.**

**நிகழ்ச்சி:**—வீதியில் போர்ப்பறை கேட்க வீராங்கனை தனது வீட்டிற்குள் ஓடி வருகிறாள்.

**வீராங்கனை:**—அப்பா! அப்பா!!

**தந்தை:**—என்னம்மா? என்ன?

**வீராங்கனை:**—மகிழ்ச்சியான செய்தியப்பா!

**தந்தை:**—அப்படியா?

**வீராங்கனை:**—ஆமாம், போர்! போர் அப்பா! போர்! தெருவிலே போர்ப்பறை. அறைந்ததை கேட்க வில்லையா நீங்கள்?

**தந்தை:**—போரா? இப்போதுதானேம்மா போர் முடிந்து ஊர் கொஞ்சம் அமைதியாக இருக்கிறது.

**வீராங்கனை:**—அதற்குள் இன்னொரு சந்தர்ப்பம். போர்! புறப்படுங்கள்! என் தோள் துடிக்கிறதப்பா! (வில்லையும் வேலையும் எடுத்துக் கொடுக்கிறாள்)

**தந்தை:**—பாவம்! போர் தொடுத்த புத்தியற்றவன் யாரோ!

**வீராங்:**—சாகத் துணிந்த ஒரு சண்டாளனாக இருப்பான்! தன்னாட்டு மங்கையர் தாலியுடனிருப்பது அவனுக்குப் பொறுக்க வில்லை போலும். பாவம்! இந்த நேரம் என் அத்தானும், அண்ணனும் இல்லையே! வீரத்தைக் காட்டித் தாய் நாட்டிற்குத் தியாகம்

செய்ய நல்லதொரு வாய்ப்பு எங்கே அவர்களுக்கு இல்லாமல் போய்விடுகிறதோ!

(பறை ஒலி கேட்கிறது—தந்தை மீசையை முறுக்குகிருர்)

**வீராங்:**—அப்பா! கேட்டீர்களா! அண்டை நாட்டு சேரனும்....

**தந்தை:**—அந்திய காலம் நெருங்கி விட்டது அவனுக்கு!

**வீராங்:**—நம் நாட்டின் மீது எப்போதும் பகையாம்.

**தந்தை:**—இதற்குள் நாடி தளர்ந்திருக்கும் அவனுக்கு. சோழனை யென்ன கோழை என்று எண்ணி விட்டானே? நாடு பிடிக்கும் நப்பாசை கொண்டு விட்டான் அந்த நயவஞ்சகன். அவன் நாவை நறுக்கி செருக்கை அடக்கிவருகிறேன்.

**வீராங்:**—(மகிழ்ச்சியால்) அப்பா! (தந்தையின் தோள்களிலே சாய்கிருள்)

**தந்தை:**—அம்மா! இதை எனது இறுதி போராகச் செய்வேன். வெற்றி இன்றேல் வீடு திரும்ப மாட்டேன்.

**வீராங்:**—தோல்வி என்பது நமக்குத் தொலை தூரமாச்சே. நம் மக்கள் தொல்லை யொழித்து வாழ எல்லைக்கு வெளியில் அந்தக் குக்கல்களை தள்ளி விட்டு வாருங்கள் அப்பா!

(மகளை உச்சி மோர்ந்து தந்தை விடை பெறுகிருர்)

**தந்தை:**—சென்று வருகிறேன் அம்மா!

**வீராங்:**—வென்று வாருங்கள் அப்பா!

[பறை யொலிக்கிறது]

**[திரை]**

## களம்: 6

### தந்தை செய்தி கேட்டல்

இடம்:—சாலை.

இருப்போர்:—வீராங்கனை, வீரர்கள்.

நிகழ்ச்சி:— போர்க்களத்தில் சோழ மன்னனின் படைகளே முன்னேறினாலும் யானை வீரன் ஒருவனால் தந்தை கொல்லப்படுகிறார். அன்றைய போர் முடிந்து வீரர்கள் வீடு திரும்புகிறார்கள். அவர்களிடம் வெற்றிச் செய்தியைக் கேட்க வீராங்கனை விரைந்து வருகிறாள்.

**வீராங்கனை:**—வாழ்க சோழ நாடு! வீரனே! வெற்றி நமது தானே!

**வீரன்:**—வெற்றி தோல்வி காணுமுன் காலம் கடந்து விட்டது. என்றாலும் இன்றைய போரில் நமக்குத் தான் சாதகம்.

**வீராங்:**—பாதகமாய் ஆக்குவதற்கா என் தந்தை வருவார். வீரனே! நல்ல சேதி சொன்னாய். அப்புறம்......

**வீரன்:**—இரு பக்கமும் போர் உச்ச நிலையில் நின்றது.

**வீராங்:**—போரிட்டவர்கள் சமர்த்தர்களல்லவா!

**வீரன்:**—இரு பக்கங்களிலும் பிணக்குவியல்கள் அப்பப்பா!

**வீராங்:**—இரத்தம் ஆறாய் பெருகியிருக்கும். போர் என்பதே அது தானே! அப்புறம்...

**வீரன்:**—அதையேன் கேட்கிறீர்கள்? எதிரிகளின் தலைகள் உருண்டு ஓடினதும், சடலங்கள் ரத்த ஆற்றில் மிதந்து வந்ததும்...

**வீராங்:**—(மகிழ்ச்சியால்) நான் அந்தக் காட்சியைக் காணுது போனேனே அட-டா! என் தந்தை எப்படி போரிட்டார்?

**வீரன்:**—உங்கள் தந்தை? ஓ!... அந்த முதியவரா?

**வீராங்:**—ஆமாம்! அவர்தான்.

**வீரன்:**—(தலையை தொங்க விட்டுக் கொண்டு) ச்சு... ச்சு...

**வீராங்:**—என்ன நடந்தது வீரா! முன்வைத்த காலைப் பின் வைத்து விட்டாரா?

**வீரன்:**—இல்லை அம்மணி! அந்த முதுமைச் சிங்கம் எதிரியின் யானையின் மேல் பாய்ந்ததைக் கண்டு பதுமையாகி விட்டோம். எதிர்த்து வந்த வேலை இமை கொட்டாது தட்டி விட்டு பகைவனை வெட்டி வீழ்த்தியதைக் கண்டு சிலையாக நின்று விட்டோம். காலத்தால் கிழவரென்ருலும் உள்ளத்தால் அவர் இளைஞர் தாயே!

**வீராங்:**—அப்பா! கேட்கக் கேட்க என் இதயம் குளிர்கிறதப்பா! அந்த இளைஞரின் மகள்தான் நான். எங்கே? அவரை...

**வீரன்:**—அவர்...

**வீராங்:**—சொல்லு... அவர்!

**வீரன்:**—வெற்றி! வெற்றி! என்று கூறிக் கொண்டே உயிர் துறந்தார் அம்மா!

**வீராங்:**—(சோகத்துடன்) ஆ! அப்பா!...வீரரே! உயிர் துறந்தார் என் தந்தை! பெருமைப் படுகிறேன்! செயற்கரிய செயலாற்றிய செம்மலின் செல்வியாக பிறந்தது பெறற்கரிய பேறல்லவா! இறவா புகழோடு இறந்து விட்டார் என் தந்தை. அவர்

தொட்டக் காரியத்தை விட்ட இடத்திலிருந்து தொடர எங்கே என் அத்தான்!

(ஓடுகிருள்)

**வீரன்:**—பெண்ணென்று பிறந்தால் இப்படியல்லவா பிறக்கணும்.

**மற்றவீரன்:**—தந்தையென்று இருந்தால் அவள் தந்தை மாதிரி இருக்கணும்.

**எல்லோரும்:**—வாழ்க!
சோழ நாடு!
வெற்றி!
நமதே!

[திரை]

## களம்: 7

### அண்ணன் போருக்குப் புறப்படல்

இடம்: **வீடு.**

இருப்போர்:—**வீராங்கனை, அத்தான், அண்ணன்.**

**நிகழ்ச்சி:**—*வீராங்கனை ஓடி வருகிறாள்.*

**வீராங்:**—அத்தான்! அத்தான்!! அண்ணா! அண்ணா!! எங்கே யிருக்கிறீர்கள்?

(அத்தான் வீட்டினுள் நுழைந்து)

**அத்தான்:**—கண்ணே! ஏன் உன் கண்கள் கலங்கி யிருக்கின்றன?

**வீராங்:**—தங்களைக் கணவனாகக் கொண்ட எனக்கு ஏனத் தான் கலக்கம்? தியாகமே உருவெடுத்த தந்தைக்கு வாய்த்த வீர மருமகனல்லவா தாங்கள்.

**அத்தான்:**—அதில் ஏதேனும் தவறு கண்டாயா?

(போர்ப்பறை ஒலி கேட்கிறது)

**வீராங்:**—அதோ! போர்ப்பறை ஒலிக்கிறது. (அத்தான் மார்பு தட்டுகிறார்) போரென்றதும் மார்பு தட்டும் அத்தான்! அதற்குத்தான் என் தந்தை உயிரைப் பலி கொடுத்து விட்டார்.

**அத்தான்:**—ஆ! என்ன சொல்கிறாய்?

**வீராங்:**—ஆம்; அத்தான்! நம் மானத்தைக் காக்கச் சென்றவர், மண்ணில் மானத்தைப் பார்த்த வாறு கிடந்தாராம். புலி போல் பாய்ந்து யானையைத் தாக்கும் போது எவனோ ஒருவன் வேல் கொண்டு விலாவில் குத்தினானாம். வீரக் குரல் கொடுத்து, "வெற்றி!

வெற்றி!'' யென்று விண்ணதிரச் சொல்லி விடை பெற்ருராம் என் தந்தை.

[அண்ணன் உள்ளே நுழைய]

அண்ணு! நம் தந்தை....

**அண்ணன்:**—தந்தைக் கென்ன?.......

**வீராங்:**—(அழுதவாறு) நம் த....ந்...தை—மங்கா புகழ் எய்ய தரணியில் தங்காது போய்விட்டார்.

**அண்ணன்:**—ஆ! தங்காய்!

**வீராங்:**—அண்ணு!

[இருவரும் கண்ணீர் ததும்பக் கட்டி யணைத்துக் கொள்கிருர்கள்]

**அண்ணன்:**—அத்தான்! எங்கள் குல விளக்கு அணைந்து விட்டதே! கண்களைக் குளமாக்கி விட்டுச் சென்று விட்டாரே! அத்தான் விடை கொடுங்கள் விரைவில் வருகிறேன்.

**அத்தான்:**—மைத்துனரே!

**அண்ணன்:**—இல்லை; போர்க்களம் புறப்பட்டு விட்டேன். வீரரே! என்று அழையுங்கள்.

**அத்தான்:**—நான் இருக்கும் போதா?

**அண்ணன்:**—இதிலுமா என்னுடன் போட்டி. தந்தை இறந்தார் என்று கேட்டும் மகன் வாளா இருக்கிருன் என்ற வீண் பழி வேண்டாம். எந்த எதிரி என் தந்தையின் உயிரைக் குடித்தானே அந்த எதிரியின் விலாவிலே இந்த வேலைப் பாய்ச்சிக் குருதியைக் குடித்தே வருவேன். சேர நாட்டானின் தலையைக் கொய்து படையை அதம் செய்தாலொழிய என் மனம் அமைதி கொள்ளாது. தங்காய்! எடு என் கேடயத்தை!

**அத்தான்:**—மைத்துனரே! மூந்திக் கொண்டீர் உமது சூழ்ச்சி புரிந்து விட்டது எனக்கு. இன்றையப் போரில் சேரன் புறங்காட்டுவான் புகழ் மாலை நீர் சூடலாம் என்று தானே! இந்த அத்தான் ஒன்றும் சொத்தையல்ல. கொடும் வாளை இப்படி (பிடுங்குகிறான்.) தங்கை வீட்டிற்குக் காவல். நீர் அவளுக்குக் காவல். நான் இந்த நாட்டிற்கே காவல். வருகிறேன்.

**அண்ணன்:**—பார்த்தாயா தங்கை! உன் புருஷன் பலே பேர்வழி! அன்று நீ தான் வேண்டுமென்று உன்னைக் கட்டிக் கொண்டார். இன்று புகழைத் தட்டப் போருக்கும் அவர் தான் போகிறேன் என்கிறார். இதை நான் அனுமதிக்க முடியாது. (அத்தானைப் பார்த்து) அத்தான்! தங்கை தனியே யிருக்கும் போது நீர் இருந்தால் தான் அவளுக்கும் தனிமை தோன்றாது. (தங்கையைப் பார்த்தவாறு) அப்படித்தானே!

[சிரிப்பு]

**அத்தான்:**—மைத்துனரே! நீர் வாய்ப் போரில்...!

**அண்ணன்:**—வாள்ப் போரிலும் உங்களைவிட கொஞ்சம் உயர்வுதான்.

[போர்ப் பறை ஒலிக்கிறது]

போர்! போர்!! (உற்சாகத்துடன்) அத்தான்! போர்ப் பறை கேட்கிறது போய் வருகிறேன். எதிரி அழைக்கிறானும்—என் தோள்கள் தினவு எடுக்கிறன.

**அத்தான்:**—போய் வாரும் மைத்துனரே! (வாளையும், கேடயத்தையும் கையில் கொடுத்து) போர்! என்றதும் நாம் போய்ப் பதுங்குவோம் என்று எண்ணினீரே? மைத்துனரே! புறமுதுகு காட்டச் செய்யும் அந்தப் புல்லர்களை......

**வீராங்:**—நன்றாக நையப்புடைத்துவா அண்ணா!

**அண்ணன்:**—நல்லது தங்காய்! சென்று வருகிறேன்!

**வீராங்:**—வென்றுவா!

[திரை]

## களம்: 8

## அண்ணன் இறந்த சேதி

**இடம்:**—**சாலை**

**இருப்போர்:**—**வீராங்கனை, வீரர்கள்.**

**நிகழ்ச்சி:**—இரண்டாவது நாள் போரிலும் சோழ மன்னனின் படைகளே முன்னேறின. ஆனால் வீராங்கனையின் அண்ணன் இறக்கிறான். படை வீரர்கள் திரும்புகிறார்கள். வெற்றிச் செய்தியைக் கேட்கத் தமிழ்த்தாய் வருகிறாள். வீரர்களைக் கண்டதும்.

**வீராங்:**—வாழ்க சோழ நாடு! வீரனே! வெற்றி நமக்குத் தானே!

**வீரன்:**—தோல்வி!........

**வீராங்:**—சொல்லாதே வீரா! சோழ நாட்டான் நாவிலிருந்து அந்த வார்த்தை வரக்கூடாது.

**வீரன்:**—அது இல்லை என்று தான் சொல்ல வந்தேன். நமது பக்கம்தான் சாதகமாய் இருந்தது.

**வீராங்:**—பாதகமாய் இருக்க முடியாதே! அப்புறம் போர் எப்படி நடந்தது?

**வீரன்:**—மலை மேல் மலை மோதியது போல் இருந்தது யானை மேல் யானை மோதியது! வாள் வீச்சிலிருந்து புறப்பட்ட ஒளி மின்னலின் பாய்ச்சலைப் போலிருந்தது. நிலை குலைந்து தரையில் தலை சாய்ந்த சடலங்கள் இடியேறு போன்று ஒலித்தது தாயே!

**வீராங்:**—போரில் இது ஒன்றும் புதிதல்லவே! புலிக் கொடி பறக்க வேண்டுமானால் புறங் காட்டினால் முடியுமா? இன்னும் எத்தனையோ தலைகள் உருண்டுத் தானே யாகவேண்டும்........ம்...(அங்கு

மிங்கும் பார்த்து) என் அண்ணன் இன்னும் வர வில்லையே

**வீரன்:**—யாரம்மா உங்கள் அண்ணன்?

**வீராங்:**—வாட்ட சாட்டமாய் வாளேந்தி நிற்பாரே அவர் தான்! பரந்தமார்பு திரண்டதோள்! சுருண்ட மீசை!

**வீரன்:**—அவரா! ஆமாம்; அவர்தான்! வேலோடு சென்று வேழத்தைக் குத்தித் தள்ளினர். அப்பப்பா! அவர் காட்டிய வீரம்! நாங்கள் வியந்து விட்டோம்! ஆனல்.......

**வீராங்:**—ஆனல்....என்ன?

**வீரன்:**—பகைவன் பாய்ந்து விட்டான் அவன் மேல்.

**வீராங்:**—பார்த்துக் கொண்டா யிருந்தார்?

**வீரன்:**—தரையில் சாய்த்து விட்டார் அவனை. அவன் தலை சுக்கு சுக்காய் விட்டது. எப்படியோ எதிரியின் வேல் மார்பில் பாய்ந்து விட்டதம்மா. இறந்து விட் டார்.

**வீராங்:**—ஆ! அண்ணா!! நீ ஆற்றலுடன் போராடினயே அதுவே போதும். அழியா புகழண்ணா உனக்கு. நீ வேழத்தை வேல் கொண்டு சாய்த்தபோது பகை வன் எப்படி பதறி யிருப்பான் தெரியுமா? உன் சுருண்ட மீசை துடித்ததைப் பார்த்து எதிரியின் உயிர் எப்படி வெருண்டு துடித்திருக்கும் தெரி யுமா? முதல் வெற்றி கண்ட நீ முடிவிலும் வெற்றி காணாது போய் விட்டாயே! அண்ணா! அத்தானை யும் அனுப்பி வைக்கிறேன். அதைப் பெற்று வர. அத்தான்!....அத்தான்!!...(ஓடுகிருள்)

**வீரன்:**—பார்த்தாயா அண்ணே!

**மற்றவன்:**—நான் ஒன்றும் குருடு இல்ல தம்பி! சொல்லு!

**வீரன்:**—என்ன தீரம்! என்ன வீரம்!

**அடுத்தவன்:**—அட-டா! இப்படியல்லவா பிறக்கணும் பெண்கள்! இவளல்லவா வீரத் தமிழச்சி!

[திரை]

## களம்: 9

### அத்தான் போர்க்களம் போதல்

இடம்:—வீடு.

இருப்போர்:—வீராங்கனை, அத்தான், மகன்.

நிகழ்ச்சி:—வீராங்கனை வீட்டினுள் ஓடுகிறாள்.

**வீராங்:**—அத்தான்!... அத்தான்!!... அண்ணா...

**அத்தான்:**—அண்ணாவிற் கென்ன?

**வீராங்:**—மண் விழுங்கிற்றத்தான்!

**அத்தான்:**—மாண்டாரா மைத்துனர்!... அன்பே! இதற்காகத்தானே நான் போகிறேன் என்றேன்.

**வீராங்:**—இப்பொழுதுதான் என்ன கெட்டுவிட்டது அத்தான்! புலித் தலையை நாய் முகக்குமா? புலிதான் புல்லைத் தின்னுமா? புறப்படுங்கள்! அந்த புல்லர்களின் பல்லை உடைத்து ஒல்லை தீர்த்து வாருங்கள். வாழ்ந்தால் மானத்தோடு வாழ்வோம். இன்றேல், மானத்திற்காக சோழ மண்ணில் மாள்வோம். சேரனை விரட்டி வீழ்த்துவோம். அவன் படைகளை அரட்டி ஆழ்த்துவோம். தருக்கனுக்குத் தலை குனிந்து இருக்க நம் மனம் பொறுக்குமா? அது நம் இனத்திற்கே ஒருக்குமா? அத்தான்! வாழ்க சோழ நாடு! என்று சொன்னவாயால் சேர நாட்டை வாழ்த்தவா! ஆணையிட்டு வாழ்ந்த நமது அரசன், சேரனாணைப்படி நடக்கவா? வரி வாங்கி வாழ்ந்த மன்னன் வரி செலுத்தி வாழ்வதா? தாழ் வல்லவா நமக்கு! மைத்துனருக்கு வாய்ப்புத் தர மறுத்தவரே! அவர் மானம் காக்க உமக்கு வாய்ப்பு இதோ! (வாளைக் கையில் கொடுத்து) செல்லுங்கள் செரு முனைக்கு!

**அத்தான்:**—கண்ணே! கவலையை விடு! உன்னை மனைவியாகக் கொண்ட நான் மகா பாக்கியசாலி; பெண்ணினத்திற்கே நீ ஒரு பொன்னுபரணம். காதலி! எங்கே கடைசி முறையாக உன்னை என் கண் குளிரப் பார்க்கிறேன். தாய்நாட்டை மீட்டால் மீண்டும் சந்திப்போம். தவறினல் இந்த உடைவாள் மட்டும் உன்னைச் சந்திக்கும்.

**வீராங்:**—அதே வாளுடன் நானும் விரைந்து வருவேன் போர் முனைக்கு! சோழ நாட்டு மங்கை யொன்றும் சொரணை கெட்டவளல்ல. அத்தான்! மன்னவர் மானங்காக்க ஒரு மங்கையின் உயிர் தேவை யென்ருல் இந்த நாட்டிற்காக நான் என் உயிரைக் கொடுக்கத் தயாராயிருக்கிறேன்.

**அத்தான்:**—(மகிழ்ச்சியால்) அன்பே!

**வீராங்:**—அத்தான்!

**பல்லவி**

**காதலி :**— வண்டும் இதழும் புரளும் காட்சியே
கண்ணுளனே காண வாருமே.

**அநு பல்லவி**

மலரின் அழகில் மனதைக் கோடுத்தே
மயங்கி நிற்கும் வண்டடதோ.

**சரணம்**

**காதலன் :**— மலரின் அழகில் மனதைக் கோடுத்தே
மயங்கும் வண்டோ நல் மாதே.

**காதலி :**— பின் யாரோ! இப்படிப் பலவாய்
சோன்னவர் பலரே பின் யாரோ.

**காதலன் :**— உன் அழகிலும் மேலாம் அறிவே
என் உள்ளம் மங்கிய தாலே.

**இருவரும் :**—அறிவின் முதலாய் வாழ்வோம் யாரும்
அறியா இன்பமும் பெறுவோம்.

—[நாஞ்சில் இராசமணி]

[இருவரும் கட்டிப் பிடித்து ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார்கள். விளையாடச் சென்றிருந்த மகன் வருகிறான்]

**மகன்:**—அம்மா! அப்பா எங்கே போகிறார்?

**வீராங்:**— அப்பா! வீரத்தைக் காட்ட போருக்குப் போகிறாரடா கண்ணே!

**மகன்:**—போருக்குச் சென்றுதான் வீரத்தைக் காட்ட வேணுமாம்மா! எங்கிட்ட காட்டட்டுமே வீரத்தை!

**வீராங்:**—(மகனைத் தூக்கி முத்த மிட்டு) வாடா கண்ணு!நீ சமர்த்தண்டா!

**மகன்:**—அப்பா கிட்டே வாள். என் கிட்டே கை. பரவாயில்லே. சண்டைக்கு வரட்டுமே! ஒரு குத்து விட்டண்ணு காது 'நொய்ங்' கும்.

**வீராங்:**—டேய்! அப்பாவை அ ப் ப டி சொல்லக் கூடாதுடா!

**மகன்.**—அம்மா! அப்பா என்ன? அம்மாவே வரட்டுமே. எதிரிக்குப் பயந்து பேசுகிற வழக்கம் இந்த சிங்கத்துகிட்டே கிடையாது. வெட்டு ஒன்று துண்டு இரண்டுதான். கேளும்மா! சின்னப் பிள்ளையிலே பயந்தா பெரியாளானப்புறம் எதைக் கண்டாலும் பயப்படுவேனும்!

**வீராங்:**—(கணவனைப் பார்த்து): பார்த்தீர்களா? புலிக்குப் பூனையா பிறக்கும்?

**மகன்:**—அப்பா! அந்த வாளைக் கொடு. அட கொடுங் கண்ணு! (தந்தையின் உடைவாளை உருவி) எப்படி எதிரியைத் தாக்கணும் தெரியுமாப்பா? சுழற்று வாளை பம்பரம் மாதிரி! சொருகு விலாவிலே அம்பு மாதிரி! தரையிலே சாய்வான் மரம் மாதிரி! (என்று சுழற்றிக் காட்டுகிறான்)

**வீராங்:**—இன்னும் சொல்லுடா கண்ணு!

**மகன்:**—சொல்லட்டுமா? (வாளை தந்தையின் வயிற்றில் சொருகுவது போல சொருகி) என் நாட்டில் உன் வாலை ஆட்டவந்த நாயே! நயவஞ்சக நரியே! தக்க தருணம் பார்த்துத் தாக்க வந்த தறுதலையே! தூங்கியவன் தொடையில் கயிறு திரித்த பழக் கமோ! சதிகாரா! சண்டாளா! எங்கே நழுவுகிறாய்? முன் வைத்தக் காலைப் பின் வைக்காதே! முட் டாளே! அக்கம் பக்கம் பார்க்காதே அறிவிலி! எப் பக்கமும் எனது சேனை. சிறுவன் தானே யென்று நினைத்தாயோ! துணிந்து விட்டேன் உன்னை துண் டாக்க! துணிவிருந்தால் எடு வாளை! காத்துக்கொள் உன் தலையை! ஹா! ஹா! [வீரமாய் நடந்து வந்து தாயை மிரட்டி] ஓ! நீ பெண்ணே! பெண்ணென்ற பேயே! ஓடிப் போ நாயே! தப்பித்துக் கொள் வாயே! இல்லையேல் சாவாயே! இது நிச்சயம் என் தாயே! ஹா!...ஹா!...(வாளைக் கீழே போட்டு விட்டு) எப்படி யம்மா என் நடிப்பு?

**வீராங்:**—அபாரம்! அபாரம்!!

**மகன்:**—இப்படிப் போரிட்டால் மக்கள் என்ன செய்வார் கள் தெரியுமா அப்பா!!

[தந்தையை ஒரு தொடையையும், தாயை இன் னொரு தொடையையும் பிடித்து தூக்கச் சொல்லுகிறான். அவர்கள் அவனைத் தூக்க]

வெற்றி!

**பெற்றோர்:**—நமதே!

**மகன்:**—வெற்றி!

**பெற்றோர்:**—நமதே!

**மகன்:**—வாழ்க!

**பெற்றோர்:**—சோழ மன்னர்!

**மகன்:**—வாழ்க!

**பெற்றோர்:**—சோழ மன்னர்!

**மகன்:**—சோழ மன்னர் கீழே யிறங்கப் போகிறார்!

[கீழே இறங்குகிறான். போர் முரசு கொட்டும் சப்தம் கேட்கிறது]

**அத்தான்:**—போர்!

**வீராங்:**—போய் வாருங்கள்.

**அத்தான்:**—(மகனைப் பார்த்து) வெற்றி வீரரே! சென்று வரட்டுமா?

**மகன்:**—தனிமையாக வா, தந்தையே?

**அத்தான்:**—போர் முனைக்குத் துணை யார் வருவார்?

**மகன்:**—நான் வருகிறேன்.

**அத்தான்:**—வேண்டாம் வீரரே. போரிட்டு வெற்றியுடன் வீடு திரும்புவேன். வரவேற்க நீர் வீட்டில் இருக்க வேண்டாமா?

**மகன்:**—நல்லதப்பா!

**அத்தான்:**—(மனைவியைப்பார்த்து) சென்றுவரட்டுமா?

**வீராங்:**—வென்று வாருங்கள்!

(தந்தை போக மகன் ஆவலுடன்)

**மகன்:**—அப்பா! ஒரு வார்த்தை! உங்களுக்கு ஆபத்து என்றால் ஒரு குரல் கொடுங்கள். ஒரே பாய்ச்சலில் ஓடி வருவேன்.

[வாளை உயர்த்தித் தந்தையை வழி அனுப்புகிறான்]

[திரை]

## களம்: 10

### சேரன் கொலு வீற்றிருத்தல்

**இடம்:**—கொலு மண்டபம்

**இருப்போர்:**—சேர மன்னன், அமைச்சர் ஆகியோர்.

**நிகழ்ச்சி:**—சேரன் அரியணையில் வீற்றிருக்க அமைச்சர் பிரதானிகள் ஆசனங்களில் அமர்ந்திருக்கிறார்கள்.

**சேரன்:**—அமைச்சரே! இறுதி வெற்றி!

**அமைச்சர்:**—இன்னும் தெரிய வில்லை.

**சேரன்:**—என்ன சொன்னீர்? முதல் நாள் யுத்தத்திலே சோழன் படை சுழன்று விழுந்து விட்டது என்று கூறினீர். இரண்டாவது நாள் போரில் வெருண் டோடி விடும் வீணர் கூட்டம் என்று ஆருடம் கணித்தீர். மூன்றாவது நாள் முடிந்தது, போர் முற்றவுமில்லை வெற்றவுமில்லை என்கிறீர். நன்று! நன்று!! போதும் நீர் போர் நடத்தியது இதற்காகத் தான் நான் சொல்வது ஏர்முனைப் பிடிப்பவன் போர் முனைக்கு வராதே என்று. அவைக் களத் திலே இருப்பவருக்குப் போர்க்களத்தில் என்ன வேலை? (சிறிது கழித்து) தளகர்த்தரே!

**தளகர்த்தர்:**—அரசே!

**சேரன்:**—அமைச்சர் கூறியதைக் கேட்டீரா?

**தளகர்த்தர்:**—கேட்டும் கேளாதவர் போல் இருக்கிறேன் பிரபு! அவர் கூறியது அத்தனையும் சரியே!

**சேரன்:**—ஹா!..........

**தளகர்த்தர்:**—மடிந்து விழும் மக்களுக்கு அளவில்லை. கண்ணிழந்தவர்—காலொடிந்தவர் — கையொடிந்த வர் கணக்கில்லை. இரு பக்கமும் தான்! காவேரிக்

கரையெல்லாம் இரத்தக் கறை! ஊக்கமும் உற்சாக மும் ஒருவருக்கேனும் ஒரு சிறிதளவும் குறைய வில்லை அரசே! என்றாலும் உயிர்ச் சேதத்திற்கும் குறைவில்லை. எதிரியை ஏறிட்டுப் பார்த்த மாத்தி ரத்திலே எடைபோடும் எனக்கு இதில் மட்டும் ஏனோ யாருக்கு எப்பொழுது வெற்றி கிட்டும் என் பதை மட்டும் கணிக்க முடியவில்லை அரசே!

**சேரன்:**—(ஆச்சரியத்துடன்) விந்தை! தளகர்த்தரே! விந்தை. சிந்தை குளிரும் சேதி சொல்வார் தள கர்த்தர் என்று பார்த்தால் மந்தை மந்தையாய் மக்கள் மடிகிறார்களாம்.

**தளகர்த்தர்:**—சோழன் ஒன்றும் கோழையல்ல என்ப தைச் சொல்ல வந்தேன் மன்னவா!

**சேரன்:**—சட்! எதிரி பேச வேண்டியதை நீரே பேசு கிறீர். எதிரியின் புகழுக்கு நீர் என்ன நிலைக் கண்ணாடியோ? இத்தனை நாளும் உண்டு வளர்ந்த அந்த மாமிச பிண்டங்கள் .........

**தளகர்த்தர்:**—மலை மலையாய் சாய்கிறார்கள்; அலையலையாய் அடுக்கி அக்கினிப் பிரவேசம் நடக்கிறது அவர் களுக்கு!

**சேரன்:**—ஆ! என்ன சொன்னீர்?

**தளகர்த்தர்:**—நேரிலே கண்டதைச் சொல்கிறேன்.

**சேரன்:**—எதைக் கண்டீர்! நமது காலாட் படை?

**தளகர்த்தர்:**—கால் பங்கு காலியாகி விட்டது.

**சேரன்:**—யானைப் படை?

**தளகர்த்தர்:**—எண்ணி விடலாம்!

**சேரன்:**—குதிரைப் படை?

**தளகர்த்தர்:**—குறைந்தே விட்டது.

**சேரன்:**—அப்படி யென்றால் படைப்பலம்......

**தளகர்த்தர்:**—பாதிக்குமேல் பாதிக்கப்பட்டு விட்டது அரசே!

**அமைச்சர்:**—ஆம்; நம் வீரர்களின் வீரம் வீணிலே விரய மாக்கப் பட்டு விட்டது.

**சேரன்:**—ஆ!

**அமைச்சர்:**—ஆச்சரியப்பட்டு ஆவதொன்று மில்லை அரசே!

**சேரன்:**—ஆத்திரப் படுகிறேன்!

**அமைச்சர்:**—அது அறிவிற்குச் சத்துரு. தங்கள் கோத்தி ரத்திற்கே தவறு!

**சேரன்:**—அரசியல் அகராதியை அப்படியே தலை கீழாய்ப் புரட்டுகிறீர்.

**அமைச்சர்:**—இல்லை! ஆராய்ந்து பாருங்கள் அரசே! விவே கம் வீரத்தை வெல்லும்.

**சேரன்:**—நீர் சொல்வது என்னையே கொல்லும்.

[அமைச்சர் இதைக் கேட்டதும் சிலையாகி விட்டார்]

தேவையற்றவர்களுக்கு அவைக் களத்தில் இட மளித்தால் இழிவுதானே! நாட்டின் இழிவை நீக்க வாள் வலியும், தோள்வலியும் தேடுவதை விட்டு வாய் வலிக்கப் பேசுகிறார்கள், இந்தக் கையாலாகா தவர்கள்! உயிரைப் பணயம் வைத்துப் போர்க் களத்தில் புலியென பாய்கிறார்கள் வீரர்கள்! இங்கே அழிவை நோக்குகிறதாம் ஆட்சி! ஆருடம்) கணிக்கிறார்கள். அறிவிலிகள்.

[ஒற்றன் ஓடி வந்து]

**ஒற்றன்:**—மன்னர் மன்ன! (பயந்து குழறிக் கொண்டு நம் படைகள்.........

**சேரன்:**—பரவாயில்லை தைரியமாகச் சொல்!

**ஒற்றன்:**—படைகள், விடை பெறுகின்றன மன்னவா!

**சேரன்:**—விடை பெறுகின்றன! பூனையைக் கண்டு புலி புறங்காட்டுகிறது! ஒற்றரே! ஓர்ந்து சொல்லும்! சேர நாட்டுச் சரித்திரத்தில் எதைப் புரட்டிப் புரட்டிப் பார்த்தாலும் இந்த புறங்காட்டும் படலத்தைப் பார்க்க முடியாது. பழியைச் சேர்த்துக் கொள்ளவா படை திரட்டிப் போவது! சீச்சீ! என்ன ஆனான் மணிவர்மன்!

**ஒற்றன்:**—மாண்டு விட்டார்!

**சேரன்:**—மணிவர்மன் மாண்டு விட்டான்! மலையமான்!

**ஒற்றன்:**—அவன் தலையை மட்டும் தான் கண்டேன்.

**சேரன்:**—ஜெயங் கொண்டான்?

**ஒற்றன்:**—அவன் முண்டம் துண்டாக்கப் பட்டுக் கிடந்தான்.

**சேரன்:**—விருதனும் மருதனும்.

**ஒற்றன்:**—எவருமே.........

**சேரன்:**—நிறுத்து! போதும்! மண் குதிரைகளை நம்பி ஆற்றில் இறங்கி விட்டேன்.

**அமைச்சர்:**—இல்லை அரசே! ஆழம் தெரியாமல் காலை யிட்டு விட்டோம்.

**சேரன்:**—அமைச்சரே! அவமதிக்கிறீர்!

**அமைச்சர்:**—இல்லை. அறிவுறுத்துகிறேன்.

**சேரன்:**—இல்லை.

**அமைச்சர்:**—ஆம்.

**சேரன்:**—அடக்கும் உம் நாவை! என் கோட்டைக் குள்ளேயே எதிரிக்கு ஆட்கள்! என் ஆட்சியில் எனக்கே சதி! சோழன் துடுக்கடக்கப் போர் தொடுத்த எனக்கே பழி! சகிக்க முடியவில்லை சண்டாளர்கள்!

ஊசலாடி நிற்பவனை ஊக்கு வித்து சாவுக் கஞ்சாதே! சமர் செய்! போருக்குப் பிந்தாதே. புறப்படு! புறங்காட்டாதே! என்று போதை யூட்டு வதை விட்டு—ஆழமாம்—அதிலே காலை விட்டே னும்! அறிவுறுத்துகிறனும் அறிவு! மடைதிறந் தென படை வந்தாலும் புலியெனப் பாய்ந்து பழி செய்வதை விடுத்து சோதைகள் செத்தவன் கணக்குத் தயார் செய்திருக்கிறார்கள். கோழைகள்! போரிட்டான்—புறங் காட்டான் சேர நாட்டான் என்ற நியதி செத்து விட்டது.
போங்கள்! தொலையுங்கள்! துரோகிகள்!

['துரோகிகள்' என்றதும் அரசசபையில் பெரும் கொத்தளிப்பு கிளம்பிற்று]

**அமைச்சர்:** அரசே! அப்படிச் சொல்லாதீர்கள்!

**தளகர்த்தர்:**—அந்த வார்த்தையை உங்கள் வாயால் சொல் லாதீர்கள்!

**அமைச்சர்:**—(கண்ணீருடன்) மன்னா! துரோகிகளா நாங் கள்? வஞ்சகர்களா நாங்கள்? காட்டிக் கொடுப்பவர் களா நாங்கள்? உங்கள் உப்பைத் தின்று இந்த உடலை வளர்த்தோம். இந்த உடலையும் உயிரையும்

உங்களுக்கே அர்ப்பணிப்போம். இது உறுதி! எங்கள் கூற்று குற்ற மென்றால் மன்னியுங்கள். சேர நாட்டான் என்றும் எதிரியுடன் சேர மாட்டான். வருகிறோம்.

[அமைச்சரும் தளபதியும் முன் சென்று கேடயத்தையும், வாளையும் அரசன் முன் வைத்து விட்டு வெளியேற]

**அரசன்:**—நில்லுங்கள்! போக வேண்டாம்! (அரசன் இறங்கிச் சென்று தட்டிக் கொடுத்து) நீங்கள் தானே நாட்டின் கண்கள். கண்ணை யிழந்து இந்த மண்ணை ஆள்வதா? இல்லை. மன்னன் கடிந்துரைத்தால் மந்திரிப் பதவி துறப்பதா! இல்லை கூடாது! நடந்தது நடந்து விட்டது. வாருங்கள் (அரியணையின் பக்கலில் நின்று) நாளை நாமே செல்கிறோம் போர் முனைக்கு. சோழனின் மணி மகுடம் மண்ணிலே மறையப் போகிறது. அணையப் போகிறது அந்த அரியணையேறிய அகல் விளக்கு! ஆம்; பகைவனின் அரியணை நாளை சேரனை அலங்கரிக்கும். எதிரியின் உதிரம் சிந்த, உள்ளம் நொந்திட நம் சிந்தை களித்திடுவோம். தளகர்த்தரே! படையைத் திரட்டும் போர் முகம் நோக்கி. ஏறு நடை போடட்டும்; வீறு கொள்ளட்டும்; இந்தப் போரை நாம் இறுதிப் போராகவே நடத்துவோம். புறப்படும் போர்க்களத்திற்கு!

[போகிறார். போர் முழக்கம் கேட்கிறது]

**அவையோர்:**—வாழ்க! சேர நாடு!

[திரை]

## களம்: 11

### மகன் போர்க்களம் புறப்பாடு

இடம்:—வீடு.

இருப்போர்:—வீராங்கனை, மகன்

நிகழ்ச்சி:—மூன்றாவது நாள் போரில் கணவன் இறந்த செய்தி கிடைக்க வீராங்கனை சோகம் தாளாமல் புலம்புகிறாள்.

வீராங்:—வெற்றியோடு வீடுதிரும்புவீர்கள்; உங்கள் பணைத் தோளில் படுத்து அணைத்துக்கொள்ளலா மென்று இருந்தேனே, அத்தான்! நீங்கள் வீர மரணம் எய்து வேறு உலகிற்குப் போய் விட்டீர்களே! சுற்றம் சூழ என்னை மனைவியாக ஏற்ற நீங்கள் இன்று தன்னந்தனியே தவிக்க விட்டு விட்டீர்களே! என் மஞ்சள் கயிறும் அறுந்து விட்டதே! குங்குமம் அழிந்து விட்டதே! குலைந்து விட்டதே என் குடும்பம். பொல்லாதவன் தொடுத்தப் போர் இல்லாத அல்லல் எல்லாம் கொடுத்து விட்டதே! கொக்கரிக்கும் கொடுஞ் சாவே! உன் தாகத்தைத் தீர்க்கத் தந்தையைத் தந்தேன். வேகத்தைக் குறைக்கத் தமையனைத் தந்தேன். இன்று என் வாழ்வின் வழி காட்டியை ஆசை அத்தானை கொத்தாமல் கொத்தி விட்டாயே! இன்னும் உன் கோரப் பசி அடங்க வில்லையா? குருதி குடித்தும் தாகம் தீர வில்லையா? என் கண்களைக் கவர்ந்து விட்டாயே! இருண்டு விட்டதே என் குல விளக்கு! வறண்டு விட்டதே என் வாழக்கை!

மலரும் மணமும் போலும் நாம் என்றீரே மன்னவரே! இந்த மரணம் நம்மைப் பிரித்து விட்டதே அத்தான்! நம் காதல் கீதத்தின் தாளம் முறிந்து விட்டதே! கிடைக்காதக் கனி திகட்டாதத் தேன்! தேட முடியாத திரவியம் என்பீர்களே அத்தான்! இனியும் அவ்வாறு கூற மாட்டீர்களா? என் இன்ப வாழ்வு முடிந்து விட்டதா! என் இல்லறக் கோட்டை இடிந்து விட்டதா! விடிந்து விட்டதா என் விதவை வாழ்வு! இனி என்ன செய்வேன்!

**உள்ளம்:**—கலங்காதே காரிகையே! பிறப்பிலே நீ பேதையே தவிர புவியிலே அனுதையல்ல! இறந்து விட்ட உன் கணவன் விட்டு வைத்ததை இட்டமுடன் தொட்டுமுடிக்க உன் மைந்தன் இருக்கிறான்!

**[மருமகள் படத்தில் " சின்னச் சின்ன வீடுகட்டி " என்ற மெட்டு.]**

நாட்டினுக்கு அன்பு செய்தேன்
நாயகனைத் தானிழந்தேன்
ஈட்டியினுல் காயம் தாங்கி இறந்தார்—வீரர் தமிழ்ப்
பாட்டினிலும் இடம் அடைந்தே சிறந்தார்!... (நாட்டி)

என்

வீட்டு நலனும் வேண்டேன் —எவ்
வித நலனும் வேண்டேன்

என்

நாட்டின் புகழைப் பாதுகாத்த
நாயகன் புகழ் போதும்!
ஈட்டியினுல் காயம் தாங்கி இறந்தார்—வீரர் தமிழ்ப்
பாட்டினிலும் இடம் அடைந்தே சிறந்தார்!... (நாட்டி)

—[சுப்பு - ஆறுமுகம்]

**வீராங்—:** ஆம்; என் மைந்தன் இருக்கிறுன் என் தாய் நாட்டின் இழிவைப் போக்க என் ஏந்தல் இருக்கிறுன். அத்தான்! நம் தொல்லை நீக்க நம் தோன்றல் இருக்கிறுன். நம் குறையைப் போக்க நம் குமாரன் இருக்கிறுன். ஆம் அப்புறம் நானும் இருக்கிறேன்.

### பல்லவி

மகனே! மகனே ஓடிவா!
நிகரிலா கண்ணே ஓடிவா!

### அநுபல்லவி

பகைவன் முரசொலி கேளாயோ
பகைமுடித் தேவர செல்லாயோ.

### சரணம்

முன்ஞள் உந்தன் மாமன் மடிந்தார்
இன்ஞள் உந்தன் தந்தை மறைந்தார்
செந்தமிழ்த் தாயின் செல்வமே நீயும்
தன்மானம் காத்திட செல்லா யோ.
ஆயிரம் பகைவரை போரில் அழித்தால்
ஆயிரம் பரிசுகள் அளிப்பான் மன்னன்
ஓராயிரம் முத்தம் தருவேன் கண்ணே!
வாராயோ கண்ணே ஓடிவா ராயோ.

—[நாஞ்சில் இராசமணி]

**மகன்:—**(வெளியே இருந்து ஓடி வந்து) அம்மா! அம்மா!! ஏம்மா அழுகிறே! சொல்லம்மா! நான் இருக்கும் போது நீ அழலாமா?

**வீராங்:**—(கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) மைந்த னிருக்க மாதா அழுவேனடா? மாசற்ற மாணிக் கமே! உனக்கும் எனக்கும் தாய் எது?

**மகன்:**—நமது நாடு!

**வீராங்:**—அதற்கு நமது கடமை?

**மகன்:**—நாட்டிற்குழைத்தல்.

**வீராங்:**—அந்த நாட்டிற்கே ஆபத்து என்றால்.

**மகன்:**—ஆபத்தை அகற்ற நாமே செல்ல வேண்டும். ஆமாம்! இதையெல்லாம் ஏனம்மா கேட்கிறீர்கள்!

**வீராங்:**—காரணமில்லாமலில்லையடா கண்ணே! நாம் பிறந்து வளர்ந்த நாட்டை வேறொருவன் கவர்ந்து செல்லக் கங்கணம் கட்டுகிறான்.

**மகன்:**—அப்படி யென்றால் அதை கருவறுக்க வேண்டும். அதற்காகத்தானே அப்பா போனார்?

**வீராங்:**—ஆம், உன் அப்பா போனாரடா! போனவர் போரிலே மாண்டு விட்டாரடா!

**மகன்:**—ஹா!

**வீராங்:**—போனவர் திரும்பாத இடத்திற்கு நம் இருவரை யும் விட்டு விட்டுப் போய் விட்டார். புறப்படடா என் புத்திரனே! சீவி, சிக்கெடுத்து, சீகை முடித்து, பொட்டிட்டுப் பூச்சூடி, பெற்ற மகனைப் போக வைத்தாள், போர் களத்திற்கு ஒரு தாய் யென்ற பொல்லாத பெயர் வந்தாலும் வரட்டு மடா! போய் வாடா கண்ணே!

**மகன்:**—நல்லது அன்னையே! தான் போனால் தன் மைந்தன் தவறாது வருவான், வெல்லுவான் என்று

எண்ணித்தானே அப்பா இறந்திருப்பார். அம்மா! நானே போகிறேன்.

**வீராங்:**—என் தங்கமே! இப்பொழுதுதான் என் மனம் குளிர்ந்ததடா! உன் தாத்தா, மாமா, தந்தையைக் கொன்றவனைப் பழிக்குப் பழி வாங்கு. ரத்தத்திற்கு ரத்தம் கேள். பெற்ற தாயினும் பிறந்த பொன்னாடுதான் நனி சிறந்தது. நாடு நாசகாலரிடம் சிக்கி மண்ணாய்ப் போனால் நமக்கெல்லாம் கண்ணான வாழ்வு ஏது?

**மகன்:**—இதற்காகத்தான் நான் அப்போதே அப்பாவோடு போகிறேன், என்றேன். அன்று என்னை அனுப்பியிருந்தால் அவரைச் சாக விட்டிருப்பேனா?

**வீராங்:**—என் செல்வமே! என் சிந்தை குளிர்ந்ததடா!

**மகன்:**—அம்மா! மைந்தன் மழலை என்று மனங் கலங்காதே! சிற்றுளிதானம்மா மலையைப் பிளக்கும். ஒரு துளி மோர்தானம்மா பானை நிறை பாலை தயிராக்கும். தைரியமாயிரு தாயே! நம் குலப் பெருமையைக் காப்பேன்! சோழ மன்னனின் மானம் காப்பேன்! மங்கா புகழ் சேர்ப்பேன்! வறுமையுடன் வாழ்ந்தாலும் வீரர்களாய் வாழ்வோம்! ஏழைகளாய் வாழ்ந்தாலும் கோழைகளாய் வாழ வேண்டாம். விடை தாருங்கள்.

**வீராங்:**—அப்படிச் சொல்லடா என் கண்ணே! இந்த மாநிலம் உள்ளவரை உன் பெயர் மறையாதடா! பெற்ற மைந்தனை பிறந்த மண்ணிற்காக துறந்து விட்டாள் ஒரு **தமிழ்த்தாய்** என்று வருங்காலம் சொல்லட்டும். வாடா என் செல்வமே! தந்தையும்,

தமயனும், கணவனும் இறந்த களத்திற்குத் தானடா உன்னை அனுப்புகிறேன். ஆட்டைப் பலி பீடம் நோக்கி அனுப்புவது போல். ஏடு சொல்லு மடா நாடு வாழ நாம் கேடு களைந்த கதையை! வியாதியால் சாகாதே! வேல் குத்திச் சாவு! அரவம் தீண்டி சாகாதே! அம்பு பட்டுச் சாவு! எலி போல் பதுங்கிச் சாகாதே! புலி போல் பாய்ந்து சாவு! புறப்படு போர்க்களம்! போராடு! புறப்புண் படாது போராடு! சுத்த வீரனாக மார்பிலே வடு தாங்கிப் போராடு! புகழ் தேடு மகனே! வெற்றிச் சங்கு கேட்டதும் உனக்கு முத்தங்கள் தர ஓடி வரு வேன். உன்னைப் பெற்று மகிழ்ந்ததை விட பெரிது மகிழ்வேனடா அன்று!

யாரெல்லாம் உனக்காக வாழ்ந்தார்களோ அவர்களெல்லாம் மாண்டு விட்டார்கள். நீ யாருக் காக இனி வாழ வேண்டும். வாழ்ந்து கெட்டவர்க ளென்றோ அல்லது கெட்டு வாழ்ந்தவர்களென்றோ பட்டியலில் உன் பெயர் வர வேண்டாம். வாழ்ந் தால் மானத்துடன் வாழ்வோம்! நாடு வாழ நாம் வாழ்வோம்! நாட்டுக்காக வாழ்வோம்! புறப்படடா பழி தீர்க்கும் படலத்தைப் புரட்ட!

**போர் முரசு**:—"வீட்டிற்கொரு ஆண் மகன் நாட்டைக்காக்க உடனே புறப்படு டும்-டும்-டும்".

**வீராங்கனை**:—ஆ! இன்னும் சேரன் செருக்கு அடங்க வில்லையா? போருக்கு அழைக்கிறான்? புறமுதுகு காட்ட வில்லையா புல்லன்! என் நாட்டின் எல்லை யில் இன்னும் தொல்லையா ?

(படை வீரர்கள் அணி வகுத்தவாறு)

**படை:**—வாழ்க!

**படை:**—சோழ நாடு!

**மகன்:**—அம்மா! உங்கள் குடலில் கிடந்த கொடி ஒன்றும் கோழையல்ல. கொடுங்களம்மா வாளை! அந்தக் கொடியவனைக் கொய்து விட்டு வருகிறேன். அந்தத் தீயவன் துடுக்கடக்கிக் கண்ட துண்டமாக்கிக் கழுகுக்கும் காகத்திற்கும் வீசி விட்டு வருகிறேன். வீரர் மரபில் வந்த நான் படுகளத்தைக் கண்டு பயந்திட மாட்டேன். வைத்த காலைப் பின் வாங்க மாட்டேன் எடுங்கள் உடைவாளை. கொடுங்கள் எனக்கு!

**வீராங்:**—(கொடுத்து) அப்பா!

**மகன்:**—அம்மா! நாடு கிடைத்தால் வீடு வருவேன். இல்லையேல் **பாடை யேறுவேன்.** வருகிறேன் தாயே! விடை தாருங்கள்!

(தாய் முத்தமிட்டு அனுப்பிவைக்கிறாள் மகனை)

[திரை]

## களம்: 12

### இரு படையினருக்கும் போர் நிகழல்.

இடம்:—போர்களம்.

இருப்போர்:—படை வீரர்கள், மகன், சேரன், சோழன்.

**நிகழ்ச்சி:**—இரு படைகளும் போர்க்கருவிகளைப் பிர யோகம் செய்ய வீரர்கள் செத்து மடிகிறார்கள். பிரேதங்கள் அப்புறப்படுத்தப் படுகின்றன.

**மகன்:**—என்னைப் பெற்றெடுத்தத் தாயே! உன்னை வேற்றான் அபகரிக்க விட்டு விடுவேனா! உன் மண்ணிலே பிறந்தேன் உன் மண்ணிலே தவழ்ந்தேன்—வாழ்ந்தேன். நான் வாழு மட்டும் போராடுவேன் உன்னை மீள வைத்து வாழ வைக்க! மாற்றான் உன்னை ஆள நான் வாளா யிருக்க மாட்டேன்.

(ஒரு தடியன் ஓடி வந்து)

**தடியன்:**—அடே! சின்ன பதரே!

**மகன்:**—நீ எனக்கு நிகரா?

**தடியன்:**—உன்னை நசுக்கி விடுவேன் நான்!

**மகன்:**—உன்னை பொசுக்கி விடுகிறேன் பார்! உயிர் மேல் ஆசை யிருந்தால் ஓடிப் பிழை! இல்லையேல், என் வாளுக்குப் பதில் சொல். எடு உன் வாளை! காத்துக் கொள் உன் தலையை! மரணத்தை முத்தமிடச் சித்தமா யிரு!

[வாள் போர் நடக்கிறது]

[தடியன் தோற்று ஓட]

உயிரைக் காக்க பேடி போல் ஓடி ஒளிக்காதே!

[வாளை உருவி விடுகிருன். தடியன் கீழே சாய்கிருன் அவன் மேல் சிறுவன் இருந்து கொண்டு குரல்வளையை நெறிக்கிருன். இதைக் கண்ட எதிரியொருவன் சிறுவன் மார்பில் அம்பைப் பாய்ச்ச அம்பைத் தாங்கிக் கொண்டு,]

நேருக்கு நேர் போரிடத் திறமையில்லா சேரர்களே! போர் முறை தெரியா சேரனே! ஆ! அம்மா! அய்யோ! ரத்தம்! மார்பிலே காயம்! அம்மா! அம்மா! மார்பிலே காயம்பட்டு மடிகிறேன் தாயே! ஆ! மகிழ்ச்சிதானே உனக்கு! வீணுகச் சிந்தவில்லையம்மா இந்த வீரனின் இரத்தம்! வருகிறேன் என் தாய் நாடே! உன்னை ஒரு முறை பார்த்துவிட்டு உன்னிடமே வருகிறேன்.

[சுற்றிப் பார்க்கிருன்]

வரவேற்றுக் கொள்!

[தரையிலிருந்து மண்ணையெடுத்து நெற்றியில் பூசி கீழே சாய்கிருன். சிறுவனின் வீரத்தைக் கண்டு சோழன் வியப்படைகிருன்.]

[திரை]

## களம்: 13

### வீராங்கனை போர்க்களம் புகுதல்

**இடம்: வீதி.**

**இருப்போர்: வீராங்கனை, வீரர்கள்.**

**நிகழ்ச்சி:**—போர் முடிவுற வெற்றிச் சங்கு முழங்கு கிறது. போர் வீரர்கள் வரிசையாய்ச் செல்கிறார்கள். வீராங்கனை செய்தி கேட்கச் செல்லுகிறாள்.

**1-வது வீரன்:**—அடாடா! போர்னு இதுதாண்டா போரு என்ன திரம்! என்ன வீரம்! ச்சு......ச்சு...... காரசாரமான சண்டையப்பா!

**2-வது வீரன்:**— மண்டைகள் உருண்டதைப் பார்த்தா சேரனும் சும்மா சொல்லக்கூடாது சரியான சவால் தான்.

**1-வது வீரன்:**—சேரன் போர் முழக்கம் செய்யும் போது சோழன் மட்டும் திரிசீலம், பஞ்சசீலம்னு சொல்லிக் கிட்டு சாந்தம்—சன்மார்க்கம் என்கிற கொள்கை பேசி யிருப்பாரு விரோதி நசிக்கிருப்பான் நம்ம. மிதிபட்ட புழுக்கூடத் துடிக்கும் போது நாம தலை யிலே குட்டு விழ விழ குனியலாமா?

**2-வது ஆள்:**—நம்ம ராசாவுக்கு சந்தர்ப்பம் தெரியாதா மென்ன? திரிசீலம், பஞ்சசீலமும் இப்போதா பேசுவாரு? அதோ யாரோ வருகிற மாதிரி தெரி யுதே.

**வீராங்கனை:**—வீரர்களே!

**வீரர்கள்:**—தாயே!

**வீராங்கனை:**—வாழ்க சோழ நாடு! வெற்றி நமக்குத்தானே!

1-வது ஆள்:—சேரன் படை சிதறுண்டு ஓடிற்று. சாய்ந்த பிணங்களெல்லாம் அங்கேதான். வெட்டுண்டவரும், உயிர் விட்டவர்களும், ஒரு சிலர்தான் நமது பக்கம்.

2-வது ஆள்:—இன்னும் ஒரு நாள் சண்டை நீடித்தால் முழு வெற்றியும் நம் மன்னருக்குத்தான்.

வீராங்கனை:—அப்படியா? மிக்க மகிழ்ச்சி.

[போகிறார்கள் இன்னொரு கூட்டம் வருகிறது அங்குமிங்கும் தேடுகிறாள்]

3-வது ஆள்:—யாரைத் தேடுகிறீர்கள்?

வீராங்கனை:—என் கண்மணியைத்தான் தேடுகிறேன், நாட்டைக் காத்தால் வீட்டிற்கு வருவேன் என்றானே!

3-வது ஆள்:—யார் அவன்? நான் பார்க்கவில்லையே! (தன்னோடு உள்ளவனை) ஏன் தம்பி! நீ பார்த்தாயா?

4-வது ஆள்:—ஊகும். எத்தனை வயது இருக்கும்?

வீராங்கனை: பத்து வயது பாலகன் அப்பா! அவன்!

4-வது ஆள்:—ச்சு!... ச்சு!!... அந்த பாலகனையா போர்க்களத்துக்கு அனுப்பினீர்கள். பாவம்.

5-வது ஆள்:—அண்ணே! ஒரு சின்னப் பையன் கையிலே ஒரு வேலைத் தூக்கி பாய்ந்தானே படையின் மேலே அவனோ?

4-வது ஆள்:—ஒரு வேளை அவனாகத்தானிருக்கும்.

5-வது ஆள்:—அவன் சீவி முடித்து சீராக வகுடு எடுத்து ஒரு பாலகன் சிங்கம் போல சீறிப் பாய்ந்ததை நான் பார்த்தேன்.

**வீராங்கனை:**—அவனேதான்! அவனேதான் என் மகன்! எங்கே அவன்?

**5-வது ஆள்:**—அவன்.........அவன்.......

**வீராங்கனை:**—ஆ! ஐயோ! என்ன நேர்ந்தது? சொல்லுங்கள். என்ன நேர்ந்தது?

**5-வது ஆள்:**—அவன்......

**வீராங்:**—ஏன் தயங்குகிறீர்கள்? சொல்லுங்கள்.

**5-வது ஆள்:**—இறந்து விட்டான்.

**வீராங்:**—ஆ! இறந்துவிட்டானு? என் செல்வம் செத்து விட்டானு? ஐயோ! மறைந்து விட்டானு என் மாணிக்கம்! தந்தையும், தமையனும், கணவனும், தனயனும் இறந்தபின் நான் யாருக்காக இருக்க வேண்டும். நானும் வருகிறேன் சேயைப் பிரிந்து இந்தத் தாய் இருக்கமாட்டாளடா? என் கண்ணே! உன் கன்னத்திலே முத்தம் தர ஓடோடி வருகிறேன். என் அஞ்சுகமே! உன்னை அணைத்து என் நெஞ்சார கொஞ்ச வருகிறேனடா. வீரரே! என் பாலன் இறந்ததை நீர் பார்த்தீரா?

**5-வது ஆள்:**—ஆம் தாயே! எங்கள் கண்களால் பார்த்தோம். முதுகிலே புண்பட்டு மண்ணிலே சாய்ந்து கிடந்தான்.

**வீராங்:**—ஆ!.........என்ன சொன்னுய்? புறப்புண்பட்டு இறந்தானு என் மைந்தன்! உண்மைதானு? கூறும் வீரரே! அவமானம்! இந்த மறக்குடிக்கு மறையாத கறை! நம் புகழுக்கே இழுக்கு. வீரனே! என்ன சொன்னுய்? ஏழையானுலும்

கோழையாவது கூடாது என்று கூறிய என் மகனு புறப்புண்பட்டான். இது பொய் நம்பவே மாட்டேன்! வீரத் தமிழ்ச்சியிடம் விளையாடுகிருய்! வீரனே! கொடு அந்த வாளை! இப்பொழுதே போர்க்களம் போகிறேன். என் வயிற்றில் பிறந்தவன் முதுகில் காயம்பட்டிருந்தால். அவனுக்கு பாலூட்டிய தனங்களை அறுத்தெறிவேன் பார்!

[வாளைப் பிடுங்கிக் கொண்டு ஓடுகிருள்]

**4-வது ஆள்:**—பிள்ளை செத்ததுகூட பெரிசில்ல. பின் வாங்கிச் சாகப்படாதாம். பார்த்தியா தம்பீ! தமிழ் நாட்டுத் தாயை!

**5-வது ஆள்:**— சும்மாவா சொன்னுங்க 'மானம் தான் பெரிது'ன்னு சரி வாங்க போவோம். நேரமாகிறது.

[போகிருர்கள்]

*[பிணங்கள் சிதறியும், குவிந்தும் கிடக்கின்றன. சிறு படைத் தலைவன் அவைகளை இரவு முழுவதும் காவல் காத்து நிற்கிருன். முண்டங்களும், கொட்டப் பட்ட குருதியும் அவனைத் திடுக்கிடச் செய்கின்றன. உயிர் ஊசலாடும் வீரர்களின் கடைசிக் குரல் தலைவனின் உள்ளத்தைத் தடவுகின்றது. சோக பிம்பமாக கல்லில் தலை சாய்ந்து கிடக்கும் தலைவன் எழுந்து பிணங்களின் அருகில் சென்று தலைகளைக் கைகளில் எடுத்துப் பார்த்து கண்ணீர் விடுகிருன். கையில் தீவெட்டியுடன் விராங்கனை போர்க் களத்திற்கு*

வருகிறாள். ஒவ்வொரு பிணமாகப் புரட்டிப் பார்க்கிறாள். உருண்டு கிடந்த ஒரு தலையை எடுத்து]

**வீராங்கனை:**—ஆகா! தாய் நாட்டைக் காக்கத் தன் தலையை யல்லவா கொடுத்திருக்கிறான். தன்மான முள்ளவனடா நீ இது வல்லவா தாய் நாட்டுப் பற்று. யார் பெற்ற பிள்ளையோ?

[வெட்டுண்ட உடலையும் ஒடிந்த காலையும் கையில் எடுத்து]

மண்டலத்தை மீட்க தன் சடலத்தை இரண்டாக்கி யிருக்கிறான். ச்சு.......ச்சு.......ஏறு நடை போட்டு எதிரியை வீழ்த்தியதைக் கண்டு பொறுக்காத ஒரு தறுதலையின் குறி. இவன் காலின் மேல் பாய்ந்திருக்கிறது. தாய் நாடு வாழ தன் வாழ்வைத் துறந்த தியாகி! புறப் புண் பட்டதாக யாரும் தெரியவில்லையே.

**தலைவன்:**—(தனக்குள்ளே) யார் இவள்? பெண்ணோ பேயா? ஒரு கையிலே தீ! மறுகையில் வாள்! வீரமும் சோகமும் கலந்த முகம் தலைவிரி கோலமாக இருக்கும் இவள் காளியோ? பிணத்தைத் தின்ன வந்த பேயோ? பெண்......பெண்ணேதான்...... ச்சு...........ச்சு.......யாரைப் பறி கொடுத்தாளோ? பாவம்!

[பக்கத்தில் சென்று]

**தலைவன்:**—தாயே! யார் நீ? நாயும் நரியும் ஊளையிடும் இந்த நள்ளிரவிலே பேயும் வெளிவர அஞ்சுமே கொஞ்சங்கூட அச்சமில்லாது பிணக்குவியலைப் புரட்டிப் பார்க்கும் நீ யார்?

**வீராங்கனை**:—பெற்ற தந்தையும், அன்பு அண்ணவும் இழந்து குங்குமமும் அழிந்து நாட்டைக் காக்கத் தன் ஒரே மகனைக் கொலைக்களத்திற்கு அனுப்பிய சோழ நாட்டின் சுதந்திரப் பெண் நான்!

**தலைவன்**:—ஆ!.......(கண்ணீர் மல்க திகைத்து) சுதந்திரப் பெண்! சுதந்திரப் பெண்தான். இரவு நேரத்தில் இங்கு வரப் பயமில்லையா?

**வீராங்கனை**:—பயம்! பயம்! பயமென்றால் யாது வீரரே! (ஆவேசத்தில் பயத்தின் பங்காளியே! சோழ நாட்டில் பிறந்தவன்தானா நீ. சோரம் போய்விட்டதா உன் வீரம்! தலை போனாலும் தாய் நாட்டைக் காப்பேனென்று வந்தவன் தானே நீ!

**தலைவன்**:—ஆம்; தாயே!

**வீராங்கனை**:—அப்படியானால் பயம்! உனக்கொரு கேடா! உயிரைப் பெரிதென மதிப்பவளல்லவா பயப்பட வேண்டும். உணர்ந்து கொள்! உயிர் எனக்கு வெல்லமல்ல. மரணம எனக்கு வேம்பல்ல.

**தலைவன்**:—பெண்தானா நீங்கள்?

**வீராங்கனை**:—பெண்ணாக வரவில்லை இப்பொழுது. புறங் காட்டினான் மைந்தன் என்பதைக் கேள்விப்பட்டு பேயாக வந்திருக்கிறேன். எங்கே அவன்?

**தலைவன்**:—யாரைத் தேடுகிறீர்கள்? நீங்கள் வஞ்சம் தீர்க்க யாரும் உயிருடனில்லை. அதைச் சேரன் தீர்த்துக் கொண்டான்.

**வீராங்கனை**:—என் தனயனைத் தாய் நாட்டைக் காத்துவர அனுப்பினேன். அவன் போருக்குச் சென்று

புறங்காட்டினனும் மார்பிலே வேல் தாங்கி மரண மடை என்றேன். அவன் முதுகிலே காயம் தாங்கி மூச்சு விட்டானும். வீரரே! இந்தக் கோழையைப் பெற்ற நான் ஒரு மோழையைப் பெற்றிருக்க லாமே! என் உதிரத்திலா இவன் பிறக்க வேண் டும்! எங்கே அவன்? எங்கே? எங்கே?

[அங்கு மிங்கும் பார்க்கிறுன் மகன் உடல் தெரிகிறது]

அதோ! அவன்தான். [கையில் அவனை எடுத்து] எங்கேயடா காயம்? மகனே! எனக்கா நீ பிறந் தாய்!

(மார்பிலிருந்து இரத்தம் கசிந்து கொண்டிருக் கிறதைக் காண்கிறுள்)

ஆ! என்ன? மார்பில் காயம்! என் மகனுக்கு மார்பில் இரத்தம்; ஹா!...மகனே! (மகிழ்ச்சியால் கண்ணீர் உகுக்கிறுள்) என் குல விளக்கே! அணைந்து கிடந்த தீபத்தைத் தூண்டி விட்டாயடா நீ! கையிலே தீ ஏந்தித் தூற்றி வந்தேனடா நான். நீ வாளேந்தி வரவேற்கிறுயே. பெற்ற நாளை விட பெரிதும் மகிழ்கிறேனடா! மானத்தைக் காத்த மாணிக்கமே! மங்கா புகழ் தந்த மரகதமே! உன் னைக் கோழை யென்று சொன்னனே ஒரு பொய் யன். உன்னைப் புறப்புண் பட்டு மாண்டான் என்று பிதற்றினனே ஒரு பொருமைக்காரன். அவன் இப்பொழுது என் எதிரே வந்தால் என்ன செய்வேன் தெரியுமா? நீ பேடி என்று கேட்டதும் கோடி முறை கொதித்ததடா என் இரத்தம். பித் தம் கொண்டவள் போல் சித்தம் குலைந்ததடா

என் தங்கமே! மானம் காத்த மகனே! மாளவில்லை நீ! மாய வில்லை நீ! தீயவில்லை நீ! தேய வில்லை உன் தீரத் தழும்புகள். கடமை காத்த கருவூலமே! என் உருவைக் குறைத்தல்லவா உன் உருவை உண்டாக்கினேன். ஓராயிர முத்தம் உனக்காக ஒதுக்கி வைத்திருக்கிறேனடா? செய்ந்நன்றி மறக்கவில்லை நீ! கொடுத்த வாக்கை கெடுக்கவில்லை நீ! கலி தீர்க்க வந்தவனே! குளிர்ந்ததடா என் உள்ளம். நெகிழ்ந்த தடா என் நெஞ்சம்! உன் வீரச் சாவிலே நான் சாந்தி கொண்டேன். [சோகம் கொண்டு] ஆ என் மகன் மாண்டானு! தமிழ்க் குலத்தின் ஒளி விளக்கே! நீ அணைந்து விட்டாயா? என் குலக் கொடி பூண்டற்றுப் போயிற்றே! ஐயோ! என்னைச் சித்திரவதை செய்கிறதே புத்திர சோகம்— புதல்வா!

[உணர்ச்சி கொண்டு]

ஈரமற்ற ஈனர்களாம் சேரர்கள் மத்தியில் நீ வாழ வேண்டாமடா! நாணயமற்றோர் நடுவில் நீ நடமாட வேண்டாம், மகனே! (கோபம் கொண்டு) சேர நாடே என் செல்வத்தை சிதைத்து விட்டா யென்று அகமகிழாதே! என் பாலகனைப் பலி கொண்டாயென்று பல்லிளிக்காதே! வீணிலே பலி கொடுக்க வில்லை என் வீரனை! பயனின்றி பலி கொடுக்க வில்லை என் பாலகனை! அவன் உடலி லிருந்து உதிர்த்த ஒவ்வொரு குருதிச் சொட்டுக்கும் நீ பதில் சொல்லியே ஆகவேண்டும். இல்லையேல் பழி தீர்த்து விடும்.

**தலைவன்:**—தாயே! இதுதான் உங்கள் மகனா?

**வீராங்கனை:**—வேறு யாராய் இருக்க முடியும் வீரரே!

**தலைவன்:**—பெருமைக்குரிய பெண்ணம்மா நீங்கள். இந்தப் பருவம் வீராப் பாலகன் சமர்க்களத்தில் போர் புரிந்ததைப் பார்த்திருந்தால் அப்பப்பா! சோழ நாடு பெருமை யடைந்தது உங்கள் மைந்தனால், என்பதை தெரிந்திருப்பீர்கள். பாய்ந்து வந்த வேலைக் கண்டு வெகுண்டானே தவிர பயந்து பதுங்கவில்லை, அம்மா! பெருமைக்காகச் சொல்லவில்லை! அவன் வீரத்தைக் கண்டு எனக்கொரு பிள்ளை இப்படி இல்லையே என்று நான் ஏங்கிப் போனேன். இந்த வீர மகன் தீரத்தை நேருக்கு நேராகக் கண்ட நம் மன்னர் அரசாங்க மரியாதையுடன் அடக்கம் செய்ய ஆணையிட்டிருக்கிறார். "பெற்றதும் பெற்றாள் ஒரு தமிழ்த்தாய் போர்த் திறமையும், நேர்மையும் தெரிந்த வீரனையல்லவோ பெற்றிருக்கிறாள். என்ன தவம் செய்தாளோ", என்று மன்னரே கூறினாரம்மா. இப்படி யொரு தாயும், இப்படி யொரு மகனும் இருக்கும் போது எப்படியம்மா நாம் அடிமையாவோம்.

முன் வைத்த காலை பின் வைத்திருந்தால் பிழைத்திருப்பான். ஆனால், உயிரினும் பெரிதென மானத்தை யல்லவா மதித்து விட்டான். தாயைப் போலதானம்மா சேயும் இருக்கும்.

[அமைச்சர் வருகிறார்]

**அமைச்சர்:**— தமிழ்த் தாயே! தலை தாழ்த்தி வாழ்த்துகிறேன். இந்த சோழ மண்டலமே உன்னை

வாழ்த்துகிறது. வீரத்திற்கொருவன் உன் மகன் வீருப்புப் பேசிய விரோதியை ஒழித்தான். நாம் வாழ, நம் நாடு வாழ அவன் தன் வாழ்வையே அழித்துக் கொண்டான்!

பொது மக்களே! மதிப்பிற்குரிய குடிகளே! இந்தத் தாய் வீரத்தாய் மட்டுமல்ல, நாட்டைக் காக்க நால்வரைத் தந்த **தமிழ்த்தாய்!** வருங்கால சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் படட்டும் இவள் புகழ். புலவர்கள் பாடட்டும்! புகழைக் கவிகள் காவியம் செய்யட்டும்! கலைஞர்கள் ஓவியமாக்கட்டும்! நம் புகழ் நிலைக்கட்டும் நாடு வாழட்டும்! வாழ்க!

**எல்லோரும்:**—தமிழ்த் தாய்!

**அமைச்சர்:**—வாழ்க!

**எல்லோரும்:**—தாயகம்!

**அமைச்சர்:**—பெறுவோம்!

**எல்லோரும்:**—விடுதலை.

— திரை —

## திருப்புக் காட்சி

### பள்ளியில் பாடம் கற்பித்தல்

இடம்:—நேரு பள்ளி.

இருப்போர்:— கல்வி அதிகாரி, தலைமை ஆசிரியர், தமிழ் ஆசிரியர், மாணவர்கள்.

நிகழ்ச்சி:—" *தமிழ்த் தாய்* " என்ற பாடம் முடிவடைகிறது.

**தமிழ் ஆசிரியர்:**—இப்படியாக சேரனுக்கும், சோழனுக்கும் நடந்த போரில் சேரன் படையை வீழ்த்த போர்க்களத்திற்கு அந்தத் தாய் தள்ளாத வயது கொண்ட தன் தந்தையையும், மணமாகாத தன் அண்ணனையும், ஆசை மணாளனையும், பிள்ளைக் கலி தீர்க்க வந்த தன் ஒரே பாலகனையும் அனுப்பி தாய் நாட்டின் மானத்தைக் காத்தாள்.

**க. அதிகாரி:**— மெச்சுகிறேன் சார்! நான் பாடத்தை சொன்னால் நீங்கள் நாடகத்தையே நடத்தி விட்டீர்களே!

**த. ஆசிரியர்:**—மாணவர்களுக்கு இனி மறக்காதல்லவா?

**[" ஓடி விளையாடு பாப்பா "—என்ற மெட்டு]**

(1) நாடு வளமடைய வேணும்—இங்கே
நல்ல தமிழ் வளரவேணும்!
கேடுகள் நீங்கிட வேணும்—மக்கள்
கேட்ட சுகம் கிடைக்கவேணும்!

(2) சாமிகள் ஒன்ருக வேணும்—இங்கு
சாதிகளும் ஒன்ருக வேணும்!
பூமியிலே தேசங்கள் எல்லாம்—இன்று
போரின்றி ஒன்ருக வேணும்!

(3) அய்யாவின் சொல் கேட்க வேணும்—அன்பு
அண்ணுவின் சொல்லையும் கேக்கணும்!
வைதாரையும் வாழ்த்த வேணும்—அப்படி
வாழ்த்தா விட்டாலும் வையாதிருக்கணும்!

(4) வள்ளுவர் பாரதி சொல்லே—வேதம்
வையகத்தில் வேறதுபோல் இல்லே!
உள்ளும் புறமுமே ஒன்ருய்—இருந்தால்
ஒழுங்காக நடக்கும் வாழ்க்கையும் நன்ருய்!

—[சுப்பு - ஆறுமுகம்]

**க. அதிகாரி:**—எட்மாஸ்டர் சார்! அடுத்த வகுப்பிற்குச் செல்வோமே!

**தலைமை ஆசிரியர்:**—நல்லது செல்வோம்.

[போகிருர்கள். மணி அடிக்கிறது]

**முற்றும்.**



உன்னுடல் தனில் ஒரு
ஊனம் வந்த போது
என்னுடல் நொந்தது போல் இடிந்தேன்
இன்ன முதூட்டினேன்
இன்பத் தாலாட்டி னேன்—இன்று
அண்ணனை இழந்தேன்
கண்ணனைய கணவனை
இழந்தேன் கண்ணே—உன்னையும்
இழந்தேன் எந்நாடே
கேளாய் மானம் காக்க
ஆளற்ற நிலையன்றோ
யாதும் ஊரே என்று
ஓதும் குணமுடையோர் பெருகி
உன் மானம் காக்க
எண்ணற்று போனதாலே
என் குலத்துக் கோரு மகனை
பன்னரும் இன்ன லிடை
விடுத்தேன் கேளாய் நாடே
விடுதலை வேண்டாய் நாடே.

—[நாஞ்சில் இராசமணி]

# சிறப்பான ஸ்தாபனம்

["நீலவண்ணக் கண்ணா" என்ற மெட்டு.]

காலமேல்லாம் கல்வி பயில்வோம்
கடமை என்றே நினைவில் கோள்வோம்
நேரு தேசீய பாடசாலை என்றும்
நினைவில் கோண்டு போற்றிப் புகழ்வோம்
---(கால)

அன்னை என்னை அம்மா என்று
அழைக்கச் சோன்னார் முதலில் அன்று
ஆசான் இன்று அறிவை வளர்த்தார்
அதன் பெருமைக்கு நேரு பள்ளி
நீதிவழி போதனை கேட்டு
நிலையாக்கிக் கோண்டேன் மனதில்
வாழ்வில் என்றும் நினைவில் கோண்டு
சேயலில் காட்டும் திறமே பேற்றேன்
அறிவின் வளம் அங்கே அங்கம்
அன்பு கோண்ட ஆசான் என்றும்
எண்ணம் தன்னில் ஏற்றும் கோள்ள
இணையாக உழைப்போர் என்றும்
சின்னஞ்சிறு குழந்தை நாங்கள்
சிரித்து மகிழ்ந்து கல்வி கற்க
சிறப்பான ஸ்தாபனம் ஒன்றே
அதுவே நேரு தேசீய பாடசாலை —(காலமேல்லாம்)

-[எழுத்து வேந்தன்]

Srimagal Press, Madras-1. 656-3